ஸ்ரீகுமர
குருபரர்

ஆவணி 1 (17—8—80)

தொகுதி 2] [பகுதி 11



உ

சிவ சிவ

# 'ஸ்ரீ குமரகுருபரர்'

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர்

**ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**

அருளாணையின் வண்ணம்

வெளிவரும் சமய - இலக்கியத் திங்கள் இதழ்.



---

அட்டையில்:

திருச்செந்தூர் ஸ்ரீ செந்திலாண்டவர் திருவுருவம்.

# ஸ்ரீ குமரகுருபரர்

தொகுதி 2 ஆவணி பகுதி 11

## புனிதப் பணி

ஆத்திகம் தழைக்கச் செய்யும் புனிதப்பணியில் சமய இதழ்களின் பங்கும் முக்கியமான இடம் வகிக்கிறது. ஸ்ரீகுமரகுருபரர் இதழும் அப்புனிதப்பணியில் தன்கடமையை நல்ல முறையிலேயே செய்து வருகிறது. இப்பணிதழைக்கப் பழையசந்தாதாரர்கள் சந்தாக்களைப் புதுப்பித்துக்கொள்ளுதலும், மேலும் பலரைப் புதிய சந்தாதாரர்களாகச்சேர்க்க உதவுவதும் மிக இன்றியமையாததாகும். அடுத்த இதழுடன் பலருக்கும் இரண்டாவது ஆண்டுச்சந்தா நிறைவுறும். அன்பர்கள் முன்னதாகவே மூன்றுவது ஆண்டுச் சந்தாவை அனுப்பியுதவவேண்டுகிறேன். பலரையும் ஆயுள் ஆண்டுச் சந்தாதாரர்களாகச் சேர்த்து இதழ் வளர்ச்சிக்கு உதவ வேண்டுகிறேன்.

இந்த இதழில் பண்டார மும்மணிக்கோவை ஒன்பதாம் திருப்பாடலுக்கு ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள் சுவையான-பயனுள்ள விளக்கம் அருளியுள்ளார்கள். 'சும்மா இருத்தல்' அவ்வளவு சாமான்யமான செயலாகப்படவில்லையே!

இந்த இதழில் விடைகள்வெளியிடுவதாகச் சென்ற இதழில் ஒரு வினு வெளியிடப் பெற்றது. ஆனல் இந்த இதழில் விடையரங்கப் பகுதியில் அவ்விடைகள் வெளியிடப் பெறவில்லை. முந்தைய வினுவின் விடைகளே சில எஞ்சியிருந்தமையால் அவையே இந்த இதழ் விடையரங்கப் பகுதியுள் வெளியிடப் பெற்றுள்ளன.

'அதிசய வடிவம்' என்ற தலைப்பில் வாகீசகலாநிதி திரு கி.வா. ஜ. அவர்கள் திருவாரூர் நான்மணிமாலை 9 ஆம் பாடலுக்கு அரிய விளக்கம் நல்கியுள்ளார்.

அகப்புறச் சமயங்கள் பற்றித் திரு. மு. அ. அவர்களின் கட்டுரையின் தொடர்ச்சி இந்த இதழில் வெளிவந்துள்ளது.

தத்துவச் சிறுகதையைத் திரு. கண்ணபிரான் தருகிருர். தலைப்பு; வேள்வி.

தத்துவக் கட்டுரை என்னும் புதிய தொடர் ஒன்று தொடங்கப் பெற்றுள்ளது. சைவசமய தத்துவங்களைத் திரு. தா. ம. வெள்ளைவாரணம் எளிமையாக்கி விளக்கம் தருகிருர். மாணவர் உலகிற்குப் பெரிதும் பயன்படும்.

எஞ்சிய வழக்கமான அங்கங்களும் இதழை அலங்கரிக்கின்றன

நி. ஆ-ர்.

உ

சிவ சிவ

திருச்சிராப்பள்ளியில்

# இன்னிசைத் திருமுறை விழா

(ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் நினைவு ஸ்ரீ தாயுமான ஈசர்நிதி)

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர்

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமார சுவாமித் தம்பிரான் சுவாமிகள்

அவர்கள் அருளாணையின் வண்ணம் நடத்தப் பெறுவது.

ரௌத்திரிஆண்டு ஆவணித்திங்கள் 5ஆம் நாள் (21-8-1980)

— ஆவணி மூலம், வியாழக்கிழமை —

இரவு 8 மணிக்கு ஸ்ரீதாயுமானவர் சன்னதியில் தொடங்கப் பெறும்.

திருமுறை வாணர்கள்:

1. சங்கீத பூஷணம், கலைமாமணி
   தருமபுரம் திரு. P. சுவாமிநாத முதலியார், சென்னை.

2. தேவார இசைமணி
   திரு. S. முத்துக்கந்தசாமி தேசிகர்,
   ஸ்ரீ காசிமடம் கட்டளை ஓதுவார், திருச்சிராப்பள்ளி.

3. தேவார இசைமணி,
   திரு P. இராமச்சந்திர ஓதுவார், விருத்தாசலம்.

4. தேவார சங்கீத பூஷணம்,
   திரு. தி. சா. தண்டபாணி, திருபுவனம்.

5. திரு T. R. கிருஷ்ணன், பிடில், கும்பகோணம்.

6. திரு. N. ஆறுமுக தேசிகர், பிடில், விழுதியூர்.

7. திரு. கோ. வேங்கடராமன், மிருதங்கம், திருப்பனந்தாள்

அருளாணையின் வண்ணம்,

முத்து. மெய்கண்டதேவன்,

மேலாளர், ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள்.

பூங்கொன்றைக் கண்ணியான் பொன்மன் றிறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணி யவர்



# அருள் பழுத்த கனிச்சுவை

சில செயல்கள் புறத்தே இருந்து பார்ப்பதற்கு மிக எளிமை போலத் தெரியும். 'இதுதானே; இது என்னுல் முடியும்' என்று அலட்சியமாகச் சொல்லிவிடுவோம். நாம் செய்யும்போதுதான் அதன் சிரமம் நமக்குப் புரியும். தொந்தரவு செய்பவனைச் 'சும்மா இரு' என்று மற்றவன் கடிந்து கூறுவதை நாம் கேட்டிருக்கிறோம். 'சும்மா இருப்பது' என்பது அவ்வளவு லேசான காரியமா?

அதற்கு விளக்கமான வார்த்தையும் உலக வழக்கத்தின் புழக்கத்தில் இருக்கிறது. 'சிவனே என்று இரு' என்று பேசிக்கொள்வார்கள். சும்மா இருத்தல் என்பது சிவனே என்றிருத்தல் ஆகும். இது சாமான்யமானவர்களுக்குச் சாத்தியமான காரியமன்று; 'நிற்சலனம்' என்பதும் இது தான். ஆன்மப் பயிற்சியின் மிகஉயர்ந்த நிலையே இது. இது சோம்பேறித் தனம் அன்று; மிகப்பெரிய முயற்சியில் சித்திக்கும் காரியம்.

'செய்தற்கரிய செயல்பலவும் செய்தவர்கள் எய்தற் கரியதனை எய்துவார்கள்' என்று நம் சாஸ்திர நூல்கள் சாற்றுகின்றன. அவ்வகையில் சும்மா இருத்தலும் ஒரு செய்தற் கரிய செயலாகும். திருக்களிற்றுப் படியாரில் இப்படி ஒரு வெண்பா:

செய்தற் கரிய செயல்பலவும் செய்துசிலர்
எய்தற் கரியதனை எய்தினர்கள் — ஐயோநாம்
செய்யாமை செய்து செயலறுக்க லாயிருக்கச்
செய்யாமை செய்யாத வாறு'

என்பது அப்பாடல். இதில் செய்யாமை செய்தல் என்பது சும்மா இருத்தல். செயலறுக்கச் செய்யாமை செய்தலே உபாயம் என்று திருக்களிற்றுப்படியார் அறிவிக்கிறது.

மணி என்பது உயர்ந்த செல்வம். செல்வத்தைப் பெற முயற்சி வேண்டும். நேரம், காலம் கைகூட வேண்டும். இவ்வுலகில் வருந்தாது மணியை அடைந்தவர்கள் இல்லை.

எங்கள் உயிருக்கு உயிராம் மாசிலாமணியை அடைதற்கும் முயற்சிவேண்டும். முயற்சியின் உச்சகட்டமாகிய சும்மா இருத்தல் என்பது சித்திக்க வேண்டும். அப்படிச் செயல் மாண்டு கிடந்தவரே மாசிலாமணியைப் பெற்றுர்கள். இக்கருத்தமைந்த பாடல் வருமாறு:

எம்ஆர் உயிராம் எழில்மாசி லாமணியை
அம்மா பெறுதற்கு அரிதென்றே — சும்மா
இருந்தாரே பெற்ருர், மற்று இவ்வுலகில் யாரே
வருந்தாது பெற்ருர் மணி.

(அம்மா - வியப்பிடைச்சொல்; சும்மா இருந்தார் - செயலற்று இருந்தார்; மற்று - வினைமாற்றுப் பொருளில் வந்த இடைச்சொல்)

யாரே வருந்தாது பெற்ருர் மணி என்பது வேற்றுப் பொருள் வைப்பு அணி. இவ்வேற்றுப் பொருள் வைப்பால் சும்மா இருத்தல் என்பது வருந்திப் பெறத்தக்க சித்தியே என்பது உணரப்படுகிறது.

மற்றுமொரு நுணுக்கமான சிந்தனையையும் இப்பாடலுடன் இணைத்து இன்புறலாம். மாசிலாமணி உயிருக்கு ஒப்பானவர். உயிர் காணற்கரியது. உயிர் தானேகூடுவதன்றி மனித முயற்சியால் ஒன்றனோடு கூட்டுதற்கு எளியதன்று. உலக முயற்சிகளால் அவ்வுயிரைப் பெறுதற்கு முயன்றவர்கள் தோற்றார்கள். அது நாம் பெறக் கூடுவதா என்று தன் முயற்சி அழி நிலையில் நின்றார் வியக்கத்தகும் வகையில் அதனை எளிதிற் பெற்றார்கள். இவ்வகையில் அவ்வுயிரின் எளிவந்ததன்மை புலனாகிறது. இக்கருத்தினை 'அம்மா' என்னும் வியப்பிடைச் சொல் தெளிவு செய்கிறது.

— சிவ சிவ

## தருமசாசனம்

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள் இம்மாதம் நிறுவியுள்ள அறக்கட்டளைகளின் விவரம் வருமாறு:–

57: திருஈங்கோய்மலையில் ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் நினைவுநாள் அன்னம் பாலிப்பு நிதி– முதற்பொருள் ரூ 6000/: இதன் வட்டித் தொகையிலிருந்து வைகாசிமாதம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுநாளன்று அந்தணர் அருந்தவர் ஏழைகட்கு ஈங்கோய்மலையில் அன்னம்பாலிப்புச் செய்யவும் பௌர்ணமிதோறும் அங்கு ஸ்ரீலலிதாம்பிகாதேவிக்கு சர்வபூர்த்திகரி பூஜை செய்யவும் கட்டளை செய்தருளியுள்ளார்கள்.

58: கும்பகோணம் ஸ்ரீ ஆதிகும்பேசுவரசுவாமி திருக்கோயில் மாசிமகப் பெருவிழாவில் அறுபத்து மூவர் புறப்பாடுநிதி – முதற்பொருள் ரூ 6000/: இதன் வட்டித் தொகையிலிருந்து ஷை கோயில் ஷை விழாவில் அறுபத்துமூவர் புறப்பாடு, ஆராதனை, திருமுறைப் பாராயணம் நிகழ்த்துவிக்கக் கட்டளை செய்தருளியுள்ளார்கள்.

59: திருநணா – பவானியில் தேவார ஓதுவார் உதவிநிதி — முதற்பொருள் ரூ. 7000/: பவானி சங்கமநாதேஸ்வரர் திருக்கோயிலில் பணிசெய்யும் ஓதுவாருக்கு இதன் வட்டித்தொகையிலிருந்து திருக்கோயில் திட்டப்படி ஊதியம் வழங்க - உதவித்தொகைதரக் கட்டளை செய்தருளியுள்ளார்கள்.

# இறங்குமதி

### கோ. வன்மீகநாதன்

## 22. போட்டியிடுவதின் பயனின்மை

விட்டுக்கொடுத்துப் பணிந்து செல்லுதல்;
சிதைவுபடாமல் முழுமையாய்க் காக்கப்படுவதற்கு வழிவகுக்கும்,

வளைந்து கொடுத்தல் நேராவதற்கு வழிவகுக்கும்.

(வெறுமையான பானைபோல்) பொள்ளல் உடைத்தாயிருத்தல் நிரப்புவதற்கு இடமளிப்பதாகும்.

கிழிசலும் கந்தலுமாயிருத்தல் புதுப்பிக்கப்படுவதற்கு (புத்தாடை பெறுவதற்கு) இடமளிக்கும்.

வறுமையாயிருத்தல் உடைமை உடையவனாய் இருத்தலாகும்.

ஏராளமான பொருள்களை உடையவனாயிருந்தால்
குழப்பமடைந் திருப்பவனாவான்.

* * * *

ஆகையால் ஞானி ஏகனாகிய பரப்பொருளை ஆலிங்கனம் செய்து கொண்டு உலகிற்கு ஓர் எடுத்துக் காட்டாக, உலகத்தோர் அவனைப்பார்த்து தாமும் அவனைப்போலாவதற்கு வழிகாட்டும் முன்மாதிரியாக, லக்ஷ்யப் படிவமாக இருக்கிறான்.

அவன் தன்னைக் காட்டிக் கொள்வதில்லை; அதன் காரணமாக அவன் ஒளியுடன் பிரகாசிக்கிறான்.

அவன் வாதம் செய்து தான் செய்தது, சொல்லியதுதான் சரி என்று சாதிப்பதில்லை; அதனால் அவன் நெடுந்தொலைவுவரை புகழ் படைத்தவனாயிருக்கிறான.

அவன் தற்பெருமையடித்துக் கொள்வதில்லை; அதனால் மக்கள் அவன் சொல்லுக்கு மதிப்பு அளிக்கிறார்கள்.

அவன் கர்வம் கொள்வதில்லை; அதன் காரணமாக அவன் மக்களுள் தலைமை வாய்ந்தவனாயிருக்கிறான்.

* * * *

அவன் (எவருடனும்) போட்டியிடுவதில்லை; என்ற ஒரு காரணத்தாலேயே; அவனுடன் போட்டியிட உலகில் எவராலும் முடியாது.

# திருக்கணித பஞ்சாங்கம்

**தி. கி. நாராயணசாமி, கடலூர்.**

ரௌத்திரி ௵ ஆவணி ௴ (1980 ஆகஸ்டு—செப்டம்பர்)

நாள், திதி, நட்சத்திரக் குறிப்பு *(மணிக்கணக்கில்)*

| | | | | |
|---|---|---|---|---|
| 1 | (16—8—80) | சனி | பஞ்சமி 10-32 | சித்திரை 24-15 |
| | | | | சூரியன் சிம்மராசிக்கு 13-11 |
| 2 | (17—8—80) | ஞாயிறு | சஷ்டி 12-56 | சுவாதி 27-06 |
| 3 | (18—8—80) | திங்கள் | சப்தமி 15-04 | விசாகம் 29-34 |
| 4 | (19—8—80) | செவ்வாய் | அஷ்டமி 16-44 | அனு. நாள்முழுவதும் |
| 5 | (20—8—80) | புதன் | நவமி 17-46 | அனுஷம் 7-31 |
| 6 | (21—8—80) | வியாழன் | தசமி 18-05 | கேட்டை 8-47 |
| 7 | (22—8—80) | வெள்ளி | ஏகாதசி 17-38 | மூலம் 9-19 |
| | | | | வரலட்சுமி விரதம் |
| 8 | (23—8—80) | சனி | துவாதசி 16-27 | பூராடம் 9-06 |
| 9 | (24—8—80) | ஞாயிறு | திரயோதசி 14-34 | உத்திராடம் 8-11 |
| 10 | (25—8—80) | திங்கள் | சதுர்த்தி 12-07 | திருவோணம் 6-39 |
| | | | | அவிட்டம் 28-38 |
| 11 | (26—8—80) | செவ்வாய் | O பௌர்ணமி 9-12 | சதயம் 26-16 |
| | | | | ஆவணி அவிட்டம் |
| 12 | (27—8—80) | புதன் | பிரதமை 5-59 | பூரட்டாதி 23-15 |
| | | | துவிதியை 26-37 | |
| 13 | (28—8—80) | வியாழன் | திரிதியை 23-15 | உத்திரட்டாதி 21-06 |
| 14 | (29—8—80) | வெள்ளி | சதுர்த்தி 21-01 | ரேவதி 18-43 |
| 15 | (30—8—80) | சனி | பஞ்சமி 17-04 | அசுவனி 16-33 |
| 16 | (31—8—80) | ஞாயிறு | சஷ்டி 14-30 | பரணி 14-46 |
| 17 | ( 1—9—80) | திங்கள் | சப்தமி 12-33 | *கார்த்திகை 13-29 |
| 18 | ( 2—9—80) | செவ்வாய் | அஷ்டமி 11-11 | ரோகிணி 12-37 |
| | | | | ஸ்ரீ ஜெயந்தி |
| 19 | ( 3—9—80) | புதன் | நவமி 10-01 | மிருகசிரிஷம் 12-45 |
| 20 | ( 4—9—80) | வியாழன் | தசமி 9-42 | திருஆதிரை 13-02 |
| 21 | ( 5—9—80) | வெள்ளி | ஏகாதசி 9-56 | புனர்பூசம் 14-01 |
| 22 | ( 6—9—80) | சனி | துவாதசி 10-42 | பூசம் 15-30 |
| 23 | ( 7—9—80) | ஞாயிறு | திரயோதசி 11-55 | ஆயில்யம் 17-24 |
| 24 | ( 8—9—80) | திங்கள் | சதுர்த்தசி 13-33 | மகம் 19-41 |
| 25 | ( 9—9—80) | செவ்வாய் | ● அமாவாசை 15-30 | பூரம் 22-17 |
| 26 | (10—9—80) | புதன் | பிரதமை 17-44 | உத்திரம் 25-06 |
| 27 | (11—9—80) | வியாழன் | துவிதியை 20-08 | அஸ்தம் 28-04 |
| 28 | (12—9—80) | வெள்ளி | திரிதியை 22-38 | சித்திரை |
| | | | | நாள்முழுவதும் |
| 29 | (13—9—80) | சனி | சதுர்த்தி 25-07 | சித்திரை 7-06 |
| 30 | (14—9—80) | ஞாயிறு | பஞ்சமி 27-26 | சுவாதி 10-04 |
| 31 | (15—9—80) | திங்கள் | சஷ்டி 2?-25 | விசாகம் 12-49 |

இரண்டாம் பக்கத் தொடர்ச்சி

குறிப்பு: மேற்கண்டநாளில் நிகழ்த்தப்பெறும் பிறஅறங்கள்.

1. சிதம்பரத்திலும், மதுரையிலும், திருச்செந்தூரிலும் அன்னம் பாலிப்பு.
2. திருநள்ளாற்றில் ஸ்ரீ தர்ப்பாரண்யேசுவரர்க்கு விசேஷ அபிஷேக ஆரதனை.
3. காஞ்சிபுரத்தில் திருவேகம்பப் பெருமானுக்கு விசேஷ புனுகுத் தைலாபிஷேகம், சிவாசாரியர்களுக்கு அன்னம் பாலிப்பு.
4. மதுரையில் ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானுக்குச் சந்தன மெய்ப் பூச்சு.
5. பழனியில் சாதுக்களுக்கு அன்னம் பாலிப்பு.

## உத்தர சுவாமிமலை

டெல்லி உத்தரசுவாமிமலை நூதன திருப்பணிகளுக்குக் காணிக்கைகள் அனுப்பவேண்டிய முகவரி:—

செயலர், ஸ்ரீ சுவாமிநாதசுவாமி சிவசமாஜம்,
இராமகிருஷ்ணபுரம், புது-டெல்லி.

# இராஜகோபுரம்

கதிராமங்கலம் ஸ்ரீ வநதுர்க்காபரமேஸ்வரி திருக்கோயில் இராஜகோபுரத் திருப்பணி தொடங்கியுள்ளது. கோடி அர்ச்சனைக்கும், இத்திருப்பணிக்கும் தொகை அனுப்பவேண்டிய முகவரி:-

பொருளாளர்,
கோடியர்ச்சனைக் கமிட்டி,
ஸ்ரீ வநதுர்க்காபரமேஸ்வரி ஆலயம்,
கதிராமங்கலம்,
குத்தாலம்வழி, தஞ்சைமாவட்டம்.

ஏற்றுமதி

உ

சிவமயம்

# சிதம்பரச் செய்யுட்கோவை

## A String of Verses on Chidambaram

By Kumaragurupara Swamigal

Translated into English by K. M. Venkataramiah.

59. தொடலைக் குறுந்தொடித் தோகாய்நம் பாவை
படலைச் சிறுமுச்சி உச்சிப் பசுங்கிளிளை
பேதைக் குழாத்தொடு நென்னற் பொழுதின்கண்
வீதிக்கே நின்று விளையாட் டயருங்கால்
அஞ்சனக் கண்ணுளும் தாமும் அணிதில்லைச்
செஞ்சடைக் கூத்தனுர் வெள்விடைமேல் சேறலும் (6)
உள்நெக் குருக எதிர்ப்பட்(டு) உடையானைக்
கண்ணிற் பிணித்து மனத்திற் கொடுபுக்(கு)
இறைவளை சிந்த அணிதுகில் சோரப்
பிறர்அறியா வண்ணம் புணர்ந்தும் புணராள்போல்
மையுண்கண் நீர்சோரச் சோர்தலும் வார்தழலார்
கைகோத்(து) எடுத்துக் கடிமனை கொண்டுய்ப்பப
பைந்தண் குளிரி படுத்துக் கிடத்தலும் (13)
செந்தீப் பிழம்பில் கிடத்திச் செருச் செய்வ(து)
அந்தோ கொடிதுகொடி(து) என்செய்தீர் அன்னைமீர்
பொன்னஞ் சிலையே சிலையாப் புரமெய்தான்
தண்ணென் கடுக்கை கொணர்ந்தாரோ தம்மின்என (17)
மின்தந்த நுண்இடையாய் எங்கோன் விரைத்தொங்கல்
தன்தந்தை தாள்எறிந்தாற்(கு) அன்றித் தரான் என்றேற்(கு)
அன்றே பகைநோக்(கு) அளித்தாள்மற்(று) அம்ம
சிறியாள் பெரும்பித்(து) அறிந்திருந்தும் செவ்வி
அறியா(து) உரைத்தேன் அது. (22

**Lines 1-6**

Oh peacock-like maiden wearing stringed small [ bracelets!
Our damsel,
-with a flock of green parrots having beautiful crests,
-and a crowd of innocent virgins,
Was engaged in frolic in the street yesterday;
With the Lady having her eyelashes painted with collyrium,
The Dancer at lovely Thillai having crimson braided locks,

Came along riding a white bull.

Lines 1-13

Her heart melting,
She drew near the Lord,
    -caught Him by her eyes
    -and brought Him in her heart;
Her bangles scattered loosely,
Her garb slipped down,
She entered into union in mind unobserved;
(But yet)
As if she did not have coition,
Her eyes began to shed tears,
And she fell down;
Maidens, with long tresses, clasped one
                                        another's hands,
    -held her up,
    -led her to her guarded residence,
    -and laid her to rest on a bed of cool flowers.

Lines 14-17

"Placing me in the mass of blazing fire,
                                        you fight with me;
Alas! it is cruel and inhuman;
What have you done? O Mothers!
He used the golden mountain as His bow
                            and aimed at the aerial cities;
Did He fetch the cool konrai (chaplet)?
Please give me,

Lines 15-22

-So said she.
"O Maiden having resplendent slender waist!
The fragrant garland of the Lord will not be
                    granted to any one but Chandeswara
                                who cut his father's leg"
-So I replied.
Behold!
The maiden's excessive zeal we know;
Yet without knowing the opportune time,
I told her the fact!

— திருவாரூர் நான்மணி மாலை —

# அதிசய வடிவம்

கி. வா. ஜகந்நாதன்

உலகத்தில் எந்தக் காலத்திலும் ஏழைகளும் இருக்கிறார்கள்; செல்வர்களும் இருக்கிறார்கள். சில செல்வர்கள் வறியர்களிடம் இரக்கம் கொண்டு அவர்களுக்குப் பொருளை வழங்குவார்கள். ஈவாரும் ஏற்பாரும் உள்ள உலகம் இது.

பழங்காலத்தில் வள்ளல்கள் மிகச்சிறந்த பொருள்களை வழங்குவார்கள். பெரிய யானைகளையும் பொருட் குவியலையும் இரப்பவர்களுக்கும் வள்ளல்கள் இருந்திருக்கிறார்கள். யானையை வைத்திருப்பவர்கள் பெரிய செல்வர்கள்; நாடாளும் மன்னர்களிடம் யானை இருக்கும். அவர்களுடைய செல்வத்தைக் குறிக்க 'யானை வரையிலும் உள்ள ஐசுவரியம்' என்றும் பொருள்பட, 'கஜாந்த ஐசுவரியம்' என்று சொல்வார்கள். அப்படித் தாம் பெற்றுள்ள மதம் பெற்ற யானையையும் செல்வத்தையும் பிறவற்றையும் வழங்கும் வள்ளல்கள் ஈந்து கொண்டிருக்கட்டும்.

தானமால் களிறும் மாநிதிக் குவையும்
ஏனைய பிறவும் ஈகுநர் ஈக!

வள்ளல்களிடம் வறியவர்கள் சென்று அவர்கள் தருவதை ஏற்பார்கள். தமக்கு நலம் இல்லாமையால் நலம் செய்வார்களை நாடிச் செல்வார்கள். பிறரிடம் ஒன்றை ஏற்பது இழிந்த செயல்.

''ஏற்பது இகழ்ச்சி''

என்று ஆத்தி சூடியில் வருகிறது. நமக்கு வளம் செய்யும் செல்வம் முதலிய நலன்களைப் பெறாமல் வருந்தி, பிறரிடம் ஏற்றால் உலகம் பழிக்குமே என்று அடையும் நாணத்தையும் துறந்து ஏற்பவர் உண்டு. வறுமை அவர்களை அவ்வாறு ஆட்டிப் படைக்கிறது. அவ்வாறு ஏற்பவர்கள் ஏற்கட்டும்.

நலம்பாடு இன்றி நாண்துறந்து ஒரீஇ
இலம்பாடு அலைப்ப ஏற்குநர் ஏற்க!

தம்மிடம் வருவாருக்கு வேண்டியவற்றை மனமுவந்து வழங்கி அவர்களைக் காப்பாற்றுதலும், அவ்வாறு வழங்கும் வள்ளல்களிடம் சென்று வறியவர்கள் இரத்த

லும் இந்த உலகத்தில் உள்ளன. செல்வர்கள் ஈதலும் வறியவர்கள் ஏற்றலும் இந்த உலகத்தில் காணும் இரண்டு வேருன இயற்கை.

புரவலர் புரத்தலும்
இரவலர் இரத்தலும்
இருவேறு இயற்கையும்
இவ்வுலகு உடைத்தே.

இந்த இரண்டு வேறுபட்ட இயல்புகளையும் தனித் தனியே இந்த உலகத்தில் காணலாம். ஆனல் அவ்வாறின்றி இதற்கு மாருக, ஓரிடத்திலேயே இந்த இரண்டு இயல்புகளும் இணைந் திருக்கின்றன என்ருல் ஆச்சரிய மாக இல்லையா?

அதாஅன்று

ஒருகையால் வாரி வாரி வழங்கு வதும் மற்ருெரு கையால் பிறரி டம் யாசிப்பதும் யாரிடமும் காணமுடியாது. செல்வராக இருந்தவர்கள் ஒரு காலத்தில் செல்வத்தை இழந்து வறியவர்க ளாகி, பிறரிடம் சென்று கையேந் தும் நிலைக்கு வரலாம். ஆனல் செல்வத்தை நிரம்பப் படைத் திருக்கும்போதே, பிறர் பழிக்கும் படி வேறு ஒருவரிடத்தில் கையை நீட்டுவார்களா? வறியவர்கள் பிறரிடம் ஏற்பதையே பழிக்கும் உலகம் செல்வமுடையவர்கள் பிறரிடம் ஒன்றை யாசித்தால் சும்மா விடுமா? அவர்களைப் பெரும்பழி சாரும்,

'இடக்கை முப்பத்து இரண்டு அறங்களையும் செய்கிறது; அதே சமயத்தில் வலக்கை இரக்கிறது' என்று சொன்ஞல் அதை யாரா வது நம்புவார்களா? அப்படி இருத்தல் இந்த உலகத்தில் இல்லை.

அதாஅன்று

ஒருகா லத்தில்
உருவம்மற்று ஒன்றே
இடப்பால் முப்பத்
திரண்டுஅறம் வளர்ப்ப,
வலப்பால் இரத்தல்
மாநிலத்து இன்றே.

ஆனல் இந்த இரண்டும் ஒரே ஒருவரிடத்தில் இணைந்திருப்பதை ஓரிடத்தில் காணலாம், 'இந்த அதிசயத்தை, அதாவது இடப் பக்கம் அறத்தை வளர்த்து வலப் பக்கம் ஏற்பதை, ஓரிடத்தில் கண் டோம்' என்கிருர் குமரகுருபர முனிவர்.

"அப்படியா! இந்த அதிசயம் எங்கே நிகழ்கிறது?" என்று நாம் கேட்கிருேம். அந்த இடம் இன்ன தென்று சட்டென்று சொல்ல வில்லை முனிவர். 'அது நடக்கிற இடம் எவ்வளவு சிறப்பாக இருக் கிறது தெரியுமா? செல்வவளம் கொழிக்கும் இடம் அது. வான ளவும் உயர்ந்து நிற்கும் மாடங் களை உடையது, என்று அந்த இடத்தை விரிவாக வருணித்துச் சொல்கிருர்.

அவர் காட்டுகிற இடம் திருவாரூர். அதற்குக் கமலாலயம் என்பது ஒருபெயர். அது சமலை எனக்குறுகி வழங்கும், அது பெரிய நகரம். மாணிக்கங்களை இழைத்துச் சமைத்த பல மாடங்களையும் பொலிவு பெற்ற திருமதிலையும் உடையது. எப்போதும் காவலை உடையது.

பன்மணி மாடப் பொனமதிற்
கமலைக் கடிநகர்.

அங்குள்ள மாடங்கள் எப்படி உள்ளன? மாடங்களின் மேலே அழகான துணியால் அமைந்த கொடிகளை நட்டிருப்பார்கள். அதனால் அத்தகைய மாடங்களைக் கொடி மாடம் என்று சொல்வார்கள். அந்தக் கொடிகள் வானைத் தொடுவது போல மாடங்களின் மேல் உயரத்திலிருந்து அசைகின்றன.

விண்தொட நிவந்த
வியனதுகிற் கொடிகள்

சந்திரமண்டலத்தளவும் அவை உயர்ந்து நிற்கின்றன. அவை சந்திரனையும் கிழித்துக் கொண்டு மேலே போயுள்ளன. அவ்வாறு வட்டமாக உள்ள சந்திரனை ஊடுருவப் பிளந்து கொண்டு சென்று நிமிர்ந்து நிற்கும் அந்தக் கொடிகளின் மேல் அமுதம் சொரிகிறது. சந்திரன் அமுத கிரணத்தை உடையவன். அந்தச் சந்திரனைப் போழ்ந்து செல்வதனால் கொடிகளுக்கு அந்த அமுதம் கிடைக்கின்றன.

'நம்மை ஊடுருவிச் செல்லும் இவற்றை எரித்துவிடுவோம்' என்று சந்திரன் நினைப்பதில்லை. அவன் தண்மையுடைய கிரணங்களைப் பெற்றவனாதலின் எரிக்கும் இயல்பு அவனுக்குஇல்லை. கொடிகள் கோடைக் காலத்தில் சூரியனால் வெப்பத்தை அடைகின்றன. சந்திரனை ஊடுருவிச் சென்றதனால் அவை அமுதத்தால் நனைந்து வெப்பம் தீர்கின்றன. சந்திரன் தன் அமுதத்தால் அவற்றை நனைத்து வெப்பத்தைத் தீர்த்துத் தண்மை பெறச் செய்கிறான்.

விண்தொட நிவந்த
வியனதுகிற் கொடிகள்
மண்டலம் போழ்ந்து
மதிஅகடு உடைப்ப,
வான்நிலா அமுதம்
வழங்கி அக்கொடிகள்
வேனிலில் பயின்ற
வெப்பமது ஆற்றுபு.

இந்தக் காட்சி ஒருசிறந்த உண்மையை உணர்த்துகிறது. கொடியவர் எவ்வளவு கொடுமை செய்யினும் அறிவுடைய சான்றோர்கள் அவர்களுக்கு உதவியையே செய்வார்கள்.

"இன்னாசெய் தார்க்கும் இனியவே
செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு!"

என்பது திருக்குறள். அத்தகைய சால்பைச் சந்திரனிடம் காண்கிறோம். கொடிகளாகிய கொடியார் செய்யும் தீங்கைப் பொருட்படுத்தாமல் மதியாகிய அறிஞர்

அவற்றிற்கு நலமேசெய்கிருராம், கொடியார், மதியார் என்ற சொற்களை இரண்டு பொருள் படும்படி சிலேடையாக வைத்துப் பாடுகிருர் குமரகுருபரர்.

கொடியார் எத்துணைக்
  கொடுமை செய்யினும்
மதியார் செய்திடும்
  உதவியை உணர்த்தும்.

சால்பு மிக்கவரின் இயல்பைப் புலப்படுத்தும் மாடங்களை உடைய திருவாரூரில், ஒரே வடிவத்தில் இடப்பக்கம் இரவலர்க்கு வேண்டியவற்றை வழங்கி முப்பத்திரண்டு அறங்களையும் வளர்த்தலையும், வலப்பக்கம் இரத்தலையும் கண்டோம், என்று முனிவர் சொல்கிருர்.

மாதிரிக்கும் பாதியனுகியஇறைவனிடம் இந்த அற்புதக் காட்சியைக் காணலாம். இடப்பாதி ஈந்து சிறக்க, வலப்பாதி வாங்கி நிற்கிறது. இறைவன் பிச்சையேற்கும் திருக்கோலம் உடையவனுதலை எண்ணி இப்படிப் பாடுகிருர்.

''இல்லை என்பது இலையோர்
  மருங்கிலே;
எவ்வறங்களும் உண்டோர்
  மருங்கிலே''

என்று காசிக் கலம்பகத்தில் இம்முனிவரே பாடுகிருர்.

இவ்வாறு எங்கும் கண்டறியாத அற்புதத்தை யுடைய திருக்கோலத்தை உடையவன் திருவாரூர்ப் பெருமான். 'அவனுடைய வடிவம் நீடு வாழ்க' என்று வாழ்த்தி நிறைவு செய்கிருர் முனிபுங்கவர்.

வடிவம் மற்றுஇது வாழிய பெரிதே!

இறைவனுடைய திருக்கோலத்தில் அம்மையின்பாகமும் அண்ணலின் பாகமும் ஒன்றுக்கு ஒன்று மாறுபட்டுச் செயல் செய்வதைச் சொல்லி வியப்பில் மூழ்குகிருர் முனிவர்.

தானமால் களிறும் மாநிதிக் குவையும்
ஏனைய பிறவும் ஈகுநர் ஈக!
நலம்பாடு இன்றி நாண்துறந்து ஒரீஇ
இலம்பாடு அலைப்ப ஏற்குநர் ஏற்க!
புரவலர் புரத்தலும் இரவலர்
  இரத்தலும்
இருவேறு இயற்கையும் இவ்வுலகு
  உடைத்தே;
அதாஅன்று,
ஒருகாலத்தில் உருவம்மற்று ஒன்றே
இடப்பால் முப்பத் திரண்டுஅறம்
  வளர்ப்ப,
வலப்பால் இரத்தல் மாநிலத்து
  இன்றே;
விண்தொட நிவந்த வியன்துகிற்
  கொடிகள்
மண்டலம் போழ்ந்து மதி அகடு
  உடைப்ப,
வான்நிலா அமுதம் வழங்கி,அக்
  கொடிகள்
வேனிலில் பயின்ற வெப்பமது ஆற்றுபு,
கொடியார் எத்துணைக் கொடுமை
  செய்யினுர
மதியார் செய்திடும் உதவியை
  உணர்த்தும்
பன்மணி மாடப் பொன்மதிற் கமலைக்

கடிநகர் வைப்பினில் கண்டேம்;
வடிவம் மற்றும்இது வாழிய பெரிதே.!

மதத்தை யுடைய பெருமை யைப்பெற்ற ஆண் யானைகளையும், மிக்க பொருட் குவியலையும், இவற்றையன்றி வேறு அரிய பொருள்களையும் இரவலருக்கு ஈயும் வள்ளல்கள் ஈயட்டும்! நன்மை உண்டாவதில்லாமல், பிறர் பழிப்பார்களே என்று நாணும் நாணத்தை விட்டு நீங்கி, வறுமை தம்மைத் துன்புறுத்தப் பிறரிடம் ஏற்பவர்கள் ஏற்கட்டும்! இந்த உலகம் இடுதலும் ஏற்றலு மாகிய இந்த இரண்டு வேறுபட்ட இயல்புகளையும் உடையது. அப்படி அன்றி, ஒரே காலத்தில் ஒரு வடிவமே, இடப்பக்கம் முப்பத்தி ரண்டு அறங்களையும் வளர்த்துக் கொண்டிருக்க. வலப்பக்கம் இரந்து நிற்பது என்பது பெரிய உலகத்தில் இல்லை. வானத்தைத் தொடும்படி உயர்ந்து ஓங்கிப் பரந்த துணியாலான துவசங்கள் சந்திரனுடைய வட்டமான வடிவத்தைப் பிளந்து சென்று அதன் வயிற்றைக் கிழிக்க, அந்தச் சந்திரன் ஒளியோடு பொருந்திய நிலாவையும் அமுதத்தையும் வழங்கித் தனக்குத் துன்பம் செய்த அக்கொடிகள் கோடையில் பெற்ற வெப்பத்தை ஆற்றி, கொடியவர்கள் எவ்வளவு கொடுமையைச் செய்தாலும் அறிவுடைய சான்றோர் அக்கொடுமைக்கு எதிரே கொடுமை செய்யாமல் அதை மறந்து செய்யும் உதவியைப் புலப்படுத்தும் இடமாகிய, பல மணிமாடங்களையும் பொலிவுபெற்ற மதிலையும் உடைய திருவாரூர் என்னும் காவலையுடையபதியில் அத்தகைய வியப்புக்குரிய வடிவத்தைக் கண்டோம். இந்தத் திருக்கோலம் நெடுங்காலம் வாழட்டும்!

[தானம் - மதம். ஏனைய பிறவும் என்றது குதிரை, தேர், ஆடை, உணவு முதலியவற்றை. நலம்பாடு-செல்வவளம், பிறரிடம் இரத்தல் நாணத்தைத் தருவது.
ஆவிற்கு நீர்என் றிரப்பினும் நாவிற்கு
இரவின் இளிவந்தது இல்.

என்பது திருக்குறள்.

நாணத்தைத் துறந்து நீக்கி வறியவர்கள் இரக்கிறார்கள். நாணத்தைத் துறந்த, மறுபடியும் அது தம்பால் வராமல் அதனின்றும் நீங்கி நின்று யாசிக்கிறார்களாம். இலம்பாடு - வறுமை. அலைப்ப-துன்புறுத்த. ஏற்குநர்-பிறர்பால் இரந்து நின்று அவர் தருவதை ஏற்பவர். புரவலர்-பிறருக்கு ஈந்து அவர்களைச் காப்பவர்கள். புரத்தலும் இரத்தலுமாகிய இருவேறு இயற்கை, மற்றொன்றே; மற்று, அசை. ஒன்றே: ஏகாரம், பிரிநிலை. இடப்பால்-அம்பிகை உள்ள வாமபாகம்; வலப்பால்-இறைவனுடையவலப் பாகம். மாநிலத்து - பெரிய பூமியில், விண்தொட - வானத்தைத் தொடும்படி, நிவந்த - உயர்ந்து நின்ற, கொடிகள்என்பது படரும்

கொடிகளையும் குறிக்குமாதலின் அவற்றை நீக்க, துகிற் கொடிகள் என்ருர். மதியின் மண்டலத்தைப் போழ்ந்து; மண்டலம் - வட்ட வடிவமான வடிவம். அகடு - நடுவிடம். உடைப்ப - கிழிக்க வேகமாக அசைந்து மோதிக் கிழிப்பதனல் உடைப்ப என்ருர். வான் - ஒளி. வெப்பத்தை நீக்க நிலாவையும் வேட்கையைப் போக்கஅமுதத்தையும்வழங்கின. வேனில் - கோடை வெப்பம்; ஆகுபெயர். தமக்கு ஒரு நிழலின்றி வானத்தில் பறத்தலின் வெப்பத்தை அடைந்தன. ஆற்றுபு – தணித்து. கொடியார் – கொடிகள். கொடியவர்; சிலேடை. மதியார் - சந்திரன், அறிவையுடைய சான்ருேர்; சிலேடை. உணர்த்தும் - தம்முடைய செயலால் அறிவிக்கும், சான்ருேர் வாயால் சொல்லாமல் செயலாலே இவ்வாறு செய்ய வேண்டும் என்று பிறருக்கு உணர்த்துவர்.

சந்திரன் செயலால் ஒருண்மை புலப்படுவதாகச்சொன்ருர்; இது நிதரிசன அணி.

பொன்மதில் - பொலிவுபெற்ற மதில்; பொன் - இரும்பு எனலும் ஆம். கமலையாகிய கடிநகர் என்னும் திருத்தலம்; வைப்பு - ஊர். வடிவம் இது - இந்த வடிவம். மற்று : அசை. பெரிது - நெடுங் காலம், ஏகாரம் ஈற்றசை.]

அர்த்தநாரீசத் திருக்கோலத்தை எண்ணிச் சொன்னது இந்தப் பாட்டு.

திருவாரூர் நான்மணிமாலையில் வரும் 9-ஆவது பாட்டு இது,

## இதமான வாழ்வுக்கு எளியவழிகள்

### வயிற்று வலிக்கு

(அ) சுத்தமான தேனைக் கொதிக்கும் நீரில் ஒரு ஸ்பூன்விட்டு இளஞ் சூடான நிலையில் சாப்பிட வயிற்றுவலி நிற்கும்.

### பித்தத்திற்கு

(ஆ) இஞ்சித் துண்டை நன்ருகச் சுத்தம்செய்து சிறுதுண்டுகளாக்கி சுத்தமானதேனில் 4 தினங்கள் ஊரவைத்துச் சாப்பிடப்பித்தம் குறைந்து குணமாகும்.

### பித்தவாந்தி மயக்கம்

(இ) இஞ்சிச் சாற்றை ஒரு ரூபாய் எடை உள்ளங்கையில் வைத்து உச்சந்தலையில் நன்ருக தேய்த்து வெந்நீரில் ஸ்நானம் செய்யப் பித்தவாந்தி மயக்கம் நிற்கும்.

டாக்டர் N. சடையப்பன்.



# இருபா இருபஃது

தெளிவுரை :

கு. சுந்தரமூர்த்தி எம். ஏ., திருப்பனந்தாள்

ஆணவ மலத்தை உயிர் காண்பது எங்ஙனம்? என்பது வினா. திருவருளில் அழுந்தி இன்புறுகின்ற பொழுது இத்தகைய இன்பத்தை இதுகாறும் பெறுதிருந்தமைக்கு அவ்விருள் மலமே காரணம் என உய்த்தறியமுடியும் என்பது அதற்குரிய விடை யாகும். அறிதோறும் அறியாமை காண்பது போல இறைவனைச் செறிதோறும் இவ்விருள் மல உண்மை அறியப்படும் என்பதாம். கண் - அறிவு. மருள் - மருளாகிய. பண் : குறிஞ்சி யாழ்த்திறம். மாலையென வருவனவற்றுள் முன்னையது மாலையையும் பின்னையது மயக்கத்தையும் குறித்தன.

6. மதிநுதல் பாக ஞகிக் கதிதர
வெண்ணெய்த் தோன்றி நண்ணியுள் புகுந்துஎன்
உளம்வெளி செய்துஉன் னளவில் காட்சி
காட்டியெற் சாட்டினை எனினும் நாட்டிஎன்
நுண்மையும் பெருமையும் நுவலின் அண்ணல்
பாதாள சத்தி பரியந்த மாக
ஓதி யுணர்ந்த நானே ஏக
முழுத்தும் நின்றனனே முதல்வ முழுத்தும்
புலன்கடைப் பூழை நுழைந்தனன் கலங்கி
ஆங்குஐந்து அவத்தையும் அடைந்தனன் நீங்கிப்
போக்கு வரவு புரிந்தனன் தூக்கி
எவ்விடத் துண்மையும் இவ்விடத்து ஆர்தலும்
செல்லிடத்து எய்தலும் தெரித்த மூன்றனுள்
ஒன்றுஎனக்கு அருளல் வேண்டும் என்றும்
இல்லது இலதாய் உள்ளது உள தெனும்
சொல்லே சொல்லாய்ச் சொல்லும் காலைச்
சிறுத்தலும் பெருத்தலும் இலவே நிறுத்தி
யானை எறும்பின் ஆனது போல் எனில்
ஞானம் அன்றுஅவை காய வாழ்க்கை
மற்றவை அடைந்தன வுளவெனில் அற்றன்று
விட்ட குறையின் அறிந்து தொன்று

தொட்டுவந் தனவென வேண்டும் நட்ட
பெரியதிற் பெருமையும் சிறியதிற் சிறுமையும்
உரியது நினக்கே உண்மை பெரியோய்
எனக்கின்று ஆகும் என்றும்
மனக்கினி யாய்இனி மற்றது மொழியே.

(தெ – ரை) தலைமையுடையவனே! மனத்திற் கினியவனே! சந்திரனைப்போன்ற நெற்றியையுடைய உமையம்மையை ஒருகூற்றிலே கொண்டு நிற்கும் நீர், அடியேனுக்கு வீடுபேறு அருளுதற்பொருட்டுத் திருவெண்ணெய் நல்லூரில் தோன்றியருளி அடியேனது உளத்தில் புகுந்து நின்று அடியேனின் அறியாமையை நீக்கி அருளுணர்வை வழங்கி உயிருணர்வால் உணர்தற்கரிதான நும்முடைய இயல்பினையும் அடியேன் கண்டு இன்புறுமாறுசெய்து அவ்வமையத்து என்னியல்பை யும் காணுமாறு செய்தருளினை. என்னிடத்துப் பொருந்தியிருக்கும் நொய்மையையும் பெருமையையும் நும்மிடத்து விண்ணப்பிக்கு மிடத்துப் பாதாளமுதல் அருள்வழியின் எல்லைவரை நூல்களைக் கற்ற றிந்து அடியனது அறிவு சென்று அறியப்பட்ட இடமெல்லாம் அடி யேன் தானே முழுமையாக நிற்கின்றேன். அவ்வாறு முழுமையாக இருந்தும் ஒன்றை அறியுமிடத்துப் பொறிகளாயுள்ள இழிந்த துளை வழிப் புலன்களை நுகர்கின்றேன். அடியேனுக்கு உளதாய அறிவை விடுத்து நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்கல் ஆகிய ஐவகைத் துன்பத்திற்கும் இலக்காகின்றேன். அவற்றையும் விடுத்து இறந்தும், பிறந்தும் வருகின்றேன். இவையனைத்தையும் திருவுளத்தே எண்ணி அடியேன் யாண்டும் நீக்கமற நிற்பதற்கும் இது பொழுது இவ்வுடலொடுகூடி வாழ்வதற்கும், இதனைவிடுத்து அறம் பாவங்கட்கு ஈடாகத் துறக்க நரகங்களில் சென்று துய்ப்பதற்கும், ஆய இம்மூவகை நிலையிலும் உயிர்க்கு இயல்பாய நிலை எது? என்பதை அருளிச் செயல் வேண்டும். என்றும்இல்லாதது இல்லாததே உள்ளது உள்ளதே என் பதுதான் உண்மைக்கூற்றென உறுதி பெறுமாயின், ஒருதன்மைத்தாய உயிர் ஒரொருகால் சிறுத்தும் ஒரொருகால் பெருத்தும் வருதல் வழக் கில்லையே. அதுநிற்க. யானையாய் நின்ற உயிர் எறும்பானற்போல எடுத்த உடல்பற்றி உயிர் சிறுத்தும் பெருத்தும் இருக்குமெனில் அது உயிரின் தன்மையை விளக்காது, உடலொடு கூடிய வாழ்க்கை நிலை யையே குறிக்கும். எடுத்த உடற்கு ஏற்பப் பெருத்தும் சிறுத்தும் அறியவல்லது உயிராதலின் அவ்வாழ்க்கைநிலை உயிரின் வாழ்க்கை நிலையேயன்றி உடலின் வாழ்க்கை நிலையன்று எனில், எடுத்த உடற் கேற்ப அறிந்தறிந்து வந்ததை அடுத்தடுத்துவரும் பிறவியிலும்அறிதல் வேண்டும். அன்றியும் சிறியதினும் சிறியதுமாய்ப் பெரியதினும் பெரி யதுமாய் விளங்கும் தன்வயம் உடைமை நுமக்கன்றி எமக்கில்லையா கும். ஆதலின் இவ்வினாவிற்கு விடையருள வேண்டுமென்பதாம்.

# நிறை குளம்

வித்துவான். தா. குருசாமி தேசிகர்

அதோ தெரிகின்றதே - அந்தக் குளம் நீர் நிரம்பி வழிகிறது. மடைவழியாகநீர்பாய்ந்து வாய்க் கால்வழி யேசென்று வயல்களை வாழ்விக்கின்றது. அந்தக் குளத் தின் கரை முழுவதும் அடர்ந்த மரங்கள் - செடிகள் – புல்பூண்டு கள் வளர்ந்து பச்சைப் பசேல் என விளங்குகின்றன. அதற்குக் காரணம் குளத்தின் நீர்தான்.

நீர்நிறைந்த அந்தக் குளத்தின் கரையில் ஆடு மாடுகள் மேய்ந்து தண்ணீர் பருகும். கரையிலுள்ள மரங்களில் பறவைகள் கூடுகட்டி வளம்பெற வாழ்கின்றன. மாலை நேரத்தில் நீர்நிறைந்த அந்தக் குளம் கம்பலைஒலியால் நகர்ப்புறத் துச் சந்தையினையே தோற்கடிக் கும்.

நீர்நிறைந்த குளக்கரையின் ஓரத்தில் சிலஇடங்களில் தண்ணீர் கசிந்து கொண்டிருக்கும். அந்தக் கசிவால் வருகின்ற நீரினைப் பெற்றுத் தான் தோன்றியாக வளர்கின்ற - முளைக்கின்ற புல் பூண்டுகள் வளர்ச்சிபெறும்.

நீர்நிறைந்த குளத்தால் நேரடி யாகப்பயன் படுவன வயல்களே. அதேசமயத்தில்மறைமுகமாகவும் மரம் செடி கொடிகள் புல் பூண்டு கள்–பறவைகள் ஆடுமாடுகள்– முதலியவற்றிற்கும் பயன் உண்டு.

இந்த அரிய காட்சியை மனத் திலே நாம் கொண்டு நிறை குளத்தைக் காணும்போது, திரு விசைப்பா ஆசிரியர் வேணாட் டடிகட்கு இறைவன் நினைவு வரு கின்றது.

இறைவனை நீர்நிறைந்த பொய் கையாகக் கண்ட ஆசிரியர் அந் நீரில் முழுகி மலம் நீங்கி மாசற்றவ ராக விளங்கிய பலரையும் காண் கிறார். நீர்பாய்ந்து வயலின் வித்து முளையாகி-நாற்றாகி முற்றிய பயி ராகி முதிர்ந்து சாய்ந்த கதிராகிப் பயன் தருவதையும் காண்கிறார்.

இதற்கு இடையில் பொய்கைக் கரையின் ஓரம்-கசிந்து கொண்டி ருக்கும் நீரில் தானாக முளைத்துள்ள புல்பூண்டுகள் வளம் பெறச் செழித்து வளர்வதையும் காண் கின்றார்.

இறைவன் நிறைகுளத்திற்கு ஒப்பானவர் என்று உவமை காட்ட வந்த வேணாட்டடிகள் தம்மை-அக்குளக்கரையின் கசிவின் கீழே இருக்கும் புல்லாக-பூண்டாக ஒப்பிட்டுக் கொள்கின்றார்.

ஆனால் ஒருவேறுபாடு; தமக்கு அவ்விறைவனாகிய நிறைகுளம் கசிவாகிய அருளை வழங்கவே இல்லை என்று கூற வேண்டியதை நிறைந்த குளத்தின் கரைக்கீழ் கசிவே உண்டாகாதா? என்று ஏங்குகின்றார்.

குளம் என்று இருந்தால் கசிவு உண்டே? ஆனால் மடைவழி பெறும் நீர் போலப் பலர் சரியா கிரியா மார்க்கங்களில் நின்று இறையருளில் தோய்வர்.

எக்கிரியையும் செய்ய முடியாதவர் ஞானம் ஒன்றாலே நன்மையடைய முடியும்! இது நிறைகுளத்தின் கசிவால் பெறும்நிலை. இச்சிந்தனையோடு திருவிசைப்பா பாடலைக் காண்போம் :-

பொசியாதோ கீழ்க் கொம்பு
  நிறை குளம் என்றது போலத்
திசை நோக்கிப் பேழ்கணித்துச்
  சிவபெருமானே வெனினும்
இசையானல் என்திறத்தும்
  எனையுடையாள் உரையாடாள்
நசையானேன் திருத்தில்லை
  நடம்பயிலு நம்பானே

—வேணாட்டடிகள்.

என்று அகப்பொருட்கருத்தமையப்பாடியுள்ள இத்திருவிசைப்பா இறைவன் சார்ந்தாரை வாழ்விப்பான் என்றும் நிறைகுளத்தின் கீழுள்ள புல்பூண்டுகளும் பயன் பெற்றுவாழ்வதைப்போல இறைஞானம் சார்ந்தவரும் பயனடைவர் என்றும் கூறுவதை ஆராய்ந்து காணலாம்.

---

# 1. முப்பொருள் உண்மை



திருமுறைச் செம்மல் மதுரகவி தா. ம. வெள்ளைவாரணம்

முன்னுரை: ஒவ்வொரு சமயமும் தமக்கெனச் சில சிறப்புக் கொள்கைகளை மேற்கொண்டுள்ளன. அம்முறைப்படி சைவ சமயம் மேற்கொண்டுள்ள சிறப்புக் கொள்கைகளில் முப்பொருள் உண்மை என்பதும் ஒன்றாகும், முப்பொருள் என்பன பதி பசு பாசம் அதாவது இறை உயிர் தளை என்பனவாம். இம்மூன்றும் தோற்றக் கேடுகளின்றி என்றும் நிலைபெறுக உள்ளன என்ற கொள்கையே முப்பொருள் உண்மையாகும். இவைபற்றிய விளக்கத்தைக் கீழே காண்போம்.

சமயவேறுபாடு: கிரித்தவமும் இஸ்லாமும் பதி, பசு என்ற இரண்டையும் ஒப்புக்கொண்டு பாசத்தை ஒப்புக்கொள்ளமாட்டா. சமணமும் பௌத்தமும் பசு, பாசம் என்ற இரண்டையும் ஒப்புக் கொண்டு பதியை ஒப்புக்கொள்ளமாட்டா. மாயாவாதம் என்ற மதம் பதியும் பசுவும் ஒருபொருளே என்றும் பாசம் என்பது பொய்ப் பொருள் என்றும் கூறும். சைவமும் வைணவமும் பதி பசு பாசம் என்ற மூன்றையும் ஒப்புக்கொள்ளும்.

பதி: பதி என்பது கடவுள். கடவுளாகிய இறைவன் ஒருவனே ஆவான். தனக்கு உவமை இல்லாதவன், மிக்காரும் இல்லாதவன். எல்லாவற்றுக்கும் தானே தலைவன், ஆதியும் அந்தமும் இல்லாத அனாதி. உயிருக்குள் உயிராக இருப்பவன்; உயிரற்ற பொருள்களி லும் இருப்பவன். அதாவது அங்கு இங்கு எனாதபடி எங்கும் நிறைந் துள்ள வியாபி. இவன் இல்லாத இடமே இல்லை. இப்படி நிறைந்து இருப்பினும் தாமரையிலையில் தண்ணீர் போல அவற்றோடு தொடக் கில்லாதவன், அவற்றுக்கு அப்பாலும் இருப்பவன். குணங்குறி இல்லாதவன் அதாவது ஒருநாமம் ஒருருவம் ஒன்றும் இல்லாதவன். ஆயினும் அன்பால் நினைவாரது உள்ளத்தில் அவர் நினைந்தவடிவோடு விரைந்து வருபவன். அவனைக் காண்டல் கருதல் உரை என்ற மூன்று அளவைகளால் அளக்கடிமுடியாது. இப்படியன் இந்நிறத்தன் இவன் இறைவன் என்று சுட்டிக்காட்ட முடியாது. மாற்றம் மனம்

கழிந்தவன். தீயை விட்டுப் பிரிக்கமுடியாத சூட்டினைப் போலத் தன்னை விட்டுப் பிரிக்க முடியாத இச்சை ஞானம் கிரியை என்ற சக்திகளை உடையவன். உயிர்களின் ஆணவ கன்மங்களை நீக்க மாயையிலிருந்து தனு கரண புவனபோகங்களை உண்டாக்கி உயிர்களுக்குக் கொடுப்பவன்; மீட்டும் அவற்றை ஒடுக்குபவன். இம்முறையால் படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் என்ற ஐந் தொழில்களை நடாத்துபவன். விருப்புவெறுப்பற்ற நடு நிலையாளன் அதனால் நல்வழி நடக்கும் உயிர்க்கு நலமளிக்கும் அறக்கருணையாளன். தீவழி நடக்கும் உயிரைத்தக்கவாறு ஒறுத்துத் திருத்தும் மறக்கருணையாளன்.

பசு: பசு என்பது உயிர். உயிர்கள் முடிவில்லாத எண்ணிக்கை உடைய பலவாம். இறைவனைப்போல உயிர்களும் தோற்றக் கேடில்லாத அநாதியாம். உயிர்களுக்குப் பிறப்பிறப்பு என்று கூறுவது அவை உடம்போடு கூடுவதும் பிரிவதுமாகிய செயல்களேயாம். செம்பில் களிம்புபோல உயிர்கள் எப்போதும் ஆணவத்தொடு கூடியிருப்பன. அநாதி காலந்தொட்டு கன்மத்தோடும் கூடியிருப்பன. உயிர்கள் சிற்றறிவுடையன. உணர்த்த உணரும் தன்மையன. சார்ந்ததன் வண்ணமாயிருப்பன. இச்சை ஞானம் கிரியை என்ற சக்தியுடையன. ஆயினும் அச்சக்தி ஓரளவுக்கு உட்பட்டதாயிருக்கும். உயிர்கள் அணு அளவாயிருப்பன. ஆயினும் தாம் பெற்ற உடம்பு முழுவதும் வியாபித்திருக்கும் இயல்புடையன. உயிர்கள் ஆணவத்திலே அழுந்தி ஏதொன்றும் அறியாமல் இருக்கும் நிலை கேவல நிலை எனப்படும். பிறகு தனுகரண புவன போகங்களைப் பெற்றுச் சிறிது அறிவு பெற்று வாழும் நிலை சகல நிலை எனப்படும். கன்மம் நீங்கி ஆணவம் ஒடுங்கி இறைவனடியை அடைந்து பேரின்பம் துய்க்கும் நிலை சுத்த நிலை எனப்படும். தத்தம் கருமத்துக்கு ஏற்ப ஒவ்வொரு உயிரும் வெவ்வேறு வகைப்படும். ஆயினும் ஆணவகன்மமாயை என்னும் மும்மலத்தோடு கூடிய உயிர் சகலர் என்றும், ஆணவகன்மம் என்ற இரு மலத்தோடு கூடிய உயிர் பிரளயாகலர் என்றும், ஆணவமலத்தோடு மட்டும் உள்ள உயிர் விஞ்ஞானகலர் என்றும் மூவகைப்படும்.

ஆணவ கன்மங்கள் நீங்குதற்காக இறைவன் தனுகரண புவன போகங்களை உயிர்களுக்குக்கொடுப்பான். இவற்றைப்பெற்ற உயிர்கள் வினைகளைச் செய்து மீண்டும் மீண்டும் பிறந்திறந்து கறங்கும் சகடமும் போலப்பிறவியில் சுழலும். இருவினையும் ஒத்துவரும் காலத்தில் ஞானாசிரியனை அடைந்து உபதேசம் பெற்று மாயை கன்மங்களை ஒழித்து ஆணவம் ஒடுங்கி உயிர்கள் வீடு பேறடையும்.

பாசம் : பாசம் என்பது தளை. அதாவது உயிர்களைப் பந்தித்து இருக்கிற கட்டு அல்லது பிணிப்பு ஆகும். பாசமானது ஆணவம் கன்மம் மாயை என மூன்று வகைப்படும். இவை அனாதியானவை.

இவைகளில் ஆணவ மலம் என்பது ஒன்றே. இது எல்லா உயிர்களையும் அநாதிகாலந்தொட்டுப் பற்றியிருப்பது. அறிவில்லாதது. அளவிறந்த ஆற்றலுடையது. உயிர்களின் இச்சாஞானக் கிரியைகளை மயக்கும் தன்மையது. நல்ல நினைவை மறப்பிப்பது. தீயநினைவுகளை நினைப்பிப்பது. உயிர்களைத் தீயவழிகளில் இழுத்துச் செல்லும் பொல்லாங்கு உடையது. யான், எனது என்று உயிர்களைச் செருக்குறச் செய்வது. இதனால் அகங்காரம் மமகாரம் என இருவகையாகப்பேசப் படுவது. மாயைகன்மங்களைவிட மிகக்கொடியது. பரிபாக காலத்தில் மாயை கன்மங்கள் நீங்கியபோதும் தான்மட்டும் நீங்காமல் வலி மட்டும் குன்றி உயிரோடே இருப்பது. இதனால் மூல மலம் என்று கூறப்படுவது.

கன்மமலம் என்பது எண்ணற்ற பலவாகும், ஒவ்வொரு உயிரையும் அநாதி காலந்தொட்டுக் கன்மமலம் பற்றியிருக்கும். உயிருக்கு உயிர் இது வேறுபட்டிருக்கும். இக்கன்மத்துக்கு ஈடாக உயிர்களுக்கு இறைவனால் தனுமுதலியன கொடுக்கப்படுகின்றன. உடம்பைப் பெற்ற உயிர் கருமத்தை நுகர்ந்து அழிக்கும். ஆயினும் அக்கருமம் அழியும் போது மீண்டும் புதிய கருமம் உயிர்களைப் பற்றிக்கொள்ளும். இக்கருமம் நல்வினை தீவினை எனஇரண்டு எனவும், ஆகாமியம் சஞ்சிதம் பிராரத்தம் என மூன்று எனவும் பலவகையாகப் பிரிக்கப்படும்.

மாயை என்பது ஒன்றே. ஒரு துணியில் உள்ள அழுக்கைப்போக்க வண்ணான் உவர் மண்ணாகிய அழுக்கை அதோடு சேர்ப்பது போல, உயிர்களிடத்துள்ள ஆணவ கன்ம மலங்களைப் போக்க இறைவன் மாயா மலத்தை உயிர்களுடன் சேர்ப்பான். அதாவது இறைவன் மாயையிலிருந்து தனுகரண புவன போகங்களை உண்டாக்கி உயிர்களுக்கு அளித்துக் கர்மத்தைப் புசிப்பிப்பான். மாயை மலமானது சுத்த மாயை அசுத்த மாயை என இரண்டு வகைப்படும், மாயையிலிருந்து பல பொருள்களைத் தோற்றுவிப்பது போலவே, அவை மீண்டும் மாயையில் ஒடுக்கப்படும்.

முடிவுரை : இங்ஙனம் கூறப்பட்ட பதி பசு பாசங்களின் இயல்புகளை அறிந்து எல்லாச் செயலையும் சிவன் செயலாகப் பாவித்துச் செய்து இருவினை ஒப்பு ஏற்பட்டுப் பாசம் நீங்கி இறைவனடி சேர வேண்டும் என்பது சைவ சமயத்தின் நோக்கமாகும்.

## 2. தத்துவம் முப்பத்தாறு



முன்னுரை : தத்துவம் எனபது உண்மைத் தன்மை. அதாவது பிரபஞ்சத்தின் இயல்புகளாகிய மெய்ம்மைத் தன்மைகளாகும். நமது முன்னோர்கள் தமது கூரிய அறிவினால் பிரபஞ்சத்தின் இயல்புகளை ஆராய்ந்து தத்துவம் முப்பத்தாறு எனக் கணக்கிட்டிருக்கிறார்கள். இனி இவற்றின் உட்பிரிவுகளையும் சேர்த்துத் தத்துவம் 96 என்று கூறுவதும் உண்டு. இத்தத்துவங்கள் சிவதத்துவம், வித்தியா தத்துவப், ஆன்ம தத்துவம் என மூன்று வகையுள் அடங்கும், இவற்றின் விளக்கங்களைக் கீழே காண்போம்.

சிவதத்துவம் : இவை சிவம், சக்தி, சாதாக்கியம், ஈஸ்வரம், சுத்த வித்தை என ஐந்தாகும். இவை ஐந்தும் சுத்த மாயையிலிருந்து தோன்றி மீண்டும் அதிலேயே ஒடுங்கும் இயல்புடையன. அதாவது சுத்தமாயையில் இறைவன் தனது ஞானசத்தியை மட்டும் செலுத்தும் போது சிவம் என்ற தத்துவம் தோன்றும். கிரியா சத்தியை மட்டும் செலுத்தும்போது சத்தி என்ற தத்துவம் தோன்றும். ஞான கிரியா சத்திகளைச் சமமாகச் செலுத்தும் போது சாதாக்கியம் என்ற தத்துவம் தோன்றும். ஞான சத்தியைக் குறைத்துக் கிரியாசத்தியைக் கூட்டிச் செலுத்தினால் ஈஸ்வரம் என்ற தத்துவம் தோன்றும். ஞான சத்தியைக் கூட்டிக் கிரியா சத்தியைக் குறைத்துச் செலுத்தினால் சுத்த வித்தை என்ற தத்துவம் தோன்றும்.

வித்தியா தத்துவம் : இவை காலம் நியதி கலை வித்தை அராகம் புருடன் மாயை என ஏழாகும். இவை அசுத்த மாயையிலிருந்து தோன்றி மீண்டும் அதிலேயே ஒடுங்கும் இயல்புடையன. இவற்றுள் காலம் என்பது இறப்பு நிகழ்வு எதிர்வு என மூவகைப்பட்டு உலகத்துக்கும் உடம்புக்கும் ஆக்கல் காத்தல் அழித்தல்களைச் செய்து கால அளவை உண்டுபண்ணும். நியதி என்பது காலத்தில் தோன்றும் தொழிலில் ஓர் ஒழுங்கை உண்டுபண்ணும். கலை என்பது ஆணவத்தைச் சிறிது குறைத்து உயிரின் கிரியாசத்தியைப் புலப்படுத்தும். வித்தை என்பது கலையில் தோன்றி உயிரின் ஞான சத்தியைப் புலப்படுத்தும். அராகம் என்பது வித்தையில் தோன்றி உயிரின் இச்சா சத்தியைப் புலப்படுத்தும், புருடன் என்பது தனது இச்சா ஞான கிரியைச் சத்திகளை உணர்ந்த உயிர் அவற்றோடு கூடிப் பொதுமையின் நிற்கும் நிலையாகும். மாயை அல்லது மூலப்பிரகிருதி என்பது கலையில் தோன்றிச் சாத்துவிகம் இராஜசம் தாமசம் என்ற மூன்று குண வடிவாக நிற்கும்.

# சுந்தர் கலிவெண்பாவுள் சமயம்

## மு. அருணாசலம்

### III. அகப்புறச்சமயம் (தொடர்ச்சி)

5. **வைரவமதம்:-** இது பெரும்பாலும் வாம மதத்தோடு ஒத்திருக்கும். சில ஆசாரங்கள் வேறுபடும். அட்ட பைரவர் சூழ்ந்த ஆதி பைரவனே உயிருக்குயிரானவன். அவனே பரம்பொருள். பைரவனை வழிபட்டு பைரவனுடன் சேருவதே முத்தி. பைரவக் கடவுளிடமிருந்து எட்டுக்கலைகள் தோன்றி, உயிர்களுக்கு பந்தமும் வீடும் அளிக்கும். போகமார்க்கமேமுத்தியளிக்கும். மது,மாமிசம், நரபலி, மண்டையோட்டில் பிச்சை யேற்றல் முதலியன இவர்களுக்கும் உண்டு.

பாசுபதர் முதலான இவ்வைவரும் பொதுவாக வேதம், சிவாகமம் இரண்டையும் ஏற்றுக்கொண்டாலும் இவ்விரண்டிற்கும் புறமாகிய பாசுபத நூல் முதலிய நூல்களைச் சிறப்பு வகையால் பிரமாணமாய்க் கொள்கிறார்கள். வேதம், சிவாகமம் இரண்டிலும் ஆகா என விலக்கப்பட்டனவற்றையும் மேற்கொள்ளுகிறார்கள். ஆகவே இவர்கள் அகப்புறச் சமயத்தார் என்று ஆன்றோர் குறிப்பிட்டார்கள்.

சிறுத்தொண்டர் வரலாற்றில் சிவபெருமான் அவரிடம் பிள்ளைக் கறி கேட்க வந்தபோது, பைரவச் சங்கமர் வேடத்தோடு வந்தார் என்று பெரியபுராணம் கூறுகிறது.

6. **ஐக்கியவாத சைவம்:-** இதுவும் ஆணவமலம் இல்லை என்பதால் அகப்புறச் சமயமாக வைக்கப்பட்டது. பிறவி எடுத்தபின் கன்மத்தை முழுமையும் அனுபவித்துத் தீர்த்து ஆன்மாவாவது கர்மபந்தம் இல்லாத சுத்த நிலைமையடையும்போது, அதுவே முத்திநிலை என்று கொள்ளுகிறது. சிவனே குருவாக வந்து மாயா காரியத்தை நீக்க, நீரும் நீரும் கலந்தாற்போலச் சிவனறிவும், ஆன்ம அறிவும் கலந்து முத்தியாகிறது. இவ்வைக்கியவாத சைவம், ஈசுவர ஐக்கியவாத சைவம் எனவும் சொல்லப்பெறும். இச்சமயம் வேதம், சிவாகமம் இரண்டுக்கும் பிரமாணம் கொண்டு ஒழுகுவதாயினும், ஆணவமலம் கொள்ளாமையானும், அதைக்கூறும் சிவாகம வாக்கியங்களை இகழ்தலாலும் அகப்புறச் சமயமாக வைத்துக்கொள்ளப்பட்டது.

ஐக்கியவாத சைவத்தை, அகப்புறமாயிருப்பினும், அகச்சமயத்தில் சேர்த்தே சங்கற்ப நிராகரணம் முதலியவை மறுக்கின்றன.

அகப்புறத்தைத் தத்துவப் பிரகாசம் 24 வகை உட்சமய பேதம் என்று கூறுகிறது. அவை, சைவமாகிய சுத்தசைவம், அசுத்தசைவம், மிச்சிர சைவம், சித்தாந்த சைவம் அநாதி சைவம், அலாநிதா சைவம், பேதசைவம், அனுசைவம், ஆதி சைவம் என்னும் ஒன்பது; பாசுபத மாகிய பாசுபதம், சூரியவாதம், சந்திரவாதம் என்னும் மூன்று; முன்சொன்ன வாமம் ஒன்பது; பைரவம், காளாமுகம், மாவிரதம் ஆக 24.

## IV. அகச் சமயம்

அகச்சமயம் :

இனி முடிவாக அகச்சமயம் ஆறு என்ற பகுதிக்கு வருகிறோம். அகச்சமயங்கள் சித்தாந்த சைவ பேதம் என்று சொல்லுதலும் உண்டு. உமாபதி சிவாசாரியர் மறுக்கும் சமயங்கள் ஒன்பது. இவை மாயா வாதம், ஐக்கியவாதம், சம்பிரதாய ஆறு வகை அகச்சமயங்களான பாடாண வாதம், பேத வாதம், சிவசம வாதம், சங்கிராந்த வாதம், ஈசுவர அவிகார வாதம், நிமித்தகாரண பரிணாம வாதம் (இதுவே சிவாத்துவித சைவம்), இறுதியாகச் சைவவாதம் ஆக ஒன்பது. இவற்றுள் மாயாவாதம் புறச்சமயம் என்றும், ஐக்கிய வாத சைவம் அகப்புறச் சமயம் என்றும் முன்னே கண்டோம். பாடாண வாத சைவம், பேதவாத சைவம் இரண்டையும் ஒன்றாய்க்கொண்டு, இறுதி யில் சைவ வாதத்தைச் சேர்த்து ஆறு என்னும் அகச்சமயம் என்று சொல்லும் மரபையும் முன்னே குறிப்பிட்டோம். இனி இங்கு அகச் சமயங்களை மட்டும் சுருக்கிக் கூறுவோம்.

தத்துவப் பிரகாசமானது, இவற்றைச் சித்தாந்த பேதம் என்றே கூறுகிறது. சித்தாந்த பேதம் எட்டு என்பது அதன் கூற்று. (மாயா வாதம் ஒன்று மட்டும் காட்டு). ''ஈசுவர ஐக்கிய வாதம் பாடாண மோட்ச வாதம் இரண்டும் சிவாத்துவிதமாகவும், பேதவாதம், சிவ சமவாதம் இரண்டும் சிவாத்துவித பேதமாகவும், சங்கிராந்த வாதம், ஈசுவர அவிகார வாதம் இரண்டும் மிச்சிரவாதமாகவும், நிமித்த காரணபரிணாம வாதம், சைவ வாதம் இரண்டும் வாம சித்தாந்த பேதமாகவும் சொல்லப்பட்டு எட்டும் சைவ சித்தாந்த பேதமாய்த் தரிசன அவதாரத்திலுள்ளன.'' என்பது அந்நூற் கூற்று. இங்கு பாடாணவாதத்தில் தொடங்குகிறோம்

1. பாடாணவாத சைவம் : பாடாண மோட்ச வாதி மதம் என்றும் இதற்குப் பெயர். பாடாணம் (கல்) போல் கிடத்தலே மோட்சம் என்று இச்சமயம் கொள்கிறது. ஆணவத்தைப் போக்குதற்கு மாயை

உயிருடனே பொருந்தும். வினைக்கேற்றபடி உடம்பை இறைவன் உயிருக்குத் தருகிருன். இருவினைப் பயன்களை அனுபவிக்கும்போது உயிர் துன்பம் உறும். ஆணவம், உயிரின் அறிவினை மறைக்கும். இதனுல் பிறவித்துன்பம் மேன்மேலும் உளதாகும். அறிவற்ற மாந்தர்விகற்பமின்றித் துயில்வதுபோலும், பாறைபோலும் கிடப்பது முத்தி ; இன்பத் துன்ப நுகர்ச்சி இல்லாத நிலை.

2. பேதவாத சைவம் : பாசத் தொகுதியெல்லாம், செம்பிற்களிப்பு குளிகை தாக்க நீங்கி செம்பு பொன்னுகி ஒளி பெறுவதுபோல, ஈச னருள் பதியவும் பாசம் நீங்கப் பெற்று, உயிரானது சுத்த முத்தி யடையும். ''பேத வாத சைவருக்கும், பாடாண வாத சைவருக்கும் அதிக வேறுபாடில்லை. பேதவாதிகள் மறுதலைப் பொருள்பற்றி இரண்டின் மறுதலையாகிய ஒன்றெனப் பொருள்கொள்வர். இது சுருதிகளோடு முரண்.''

3. சிவ சமவாத சைவம் : பாசஞானம் ஐம்பொறிகளின் அறிவு. பசு ஞானம் அவ்வறிவு கொண்டு பொருள்களை நுகரும். இரண்டு ஞானமும் கூடாதபோது, கொழுந்துவிடாமல் அனலாய்க் கிடக்கும். தீயைப்போலப் பசுஞானம் ஒன்றையும் அறியாது கிடக்கும். உயிர் ஒன்றினும் கூடாதபோது கேவலநிலை, பாசத்தோடு கூடிக் கலப்பு நிலையில் பக்குவம் வந்தபோது பதிஞானம் உயிரிடத்துப் பதியும்; வேட்டுவன் புழுவைக் கவர்வதுபோல. புழு வண்டையே நினைந்து அதன் வடிவம் அடைவதுபோல, பசுவும் பதியையே நினைந்து பதி வடைகிறது. புழு வண்டாகி வண்டின் தொழிலைச் செய்வது போல, பசுவும் இறைவனைப்போல ஐந்தொழில் செய்ய வல்லதாகும்.

வேட்டுவன் புழுவைத் தாகுக்குவது என்பது பண்டைக்காலத்தில் நம்பப்பட்ட ஒரு செயல். அறிவியல் ரீதியாக இது உண்மையல்ல. இருப்பினும், குறித்த ஒரு சமய நிலையை உணர்த்துவது என்ற அளவுக்கு இது கொள்ளத்தக்கது.

சிவசமவாதி மதமும் மறுப்பும் சங்கற்ப நிராகரணத்தில் விரிவாக உள்ளன. சிவஞான சித்திக்கு உரை எழுதினேருள் ஞானப் பிரகாசர் என்பவர் ஒருவர். அவர் உரை சிவசமவாத உரை என்று கூறிச் சிவஞான சுவாமிகள் அவ்வுரைக்குக் கண்டனம் எழுதியிருப்பதும் இங்கு உணரத்தக்கது.

4. சங்கிராந்த வாதசைவம் : ஆன்மாவானது விளக்குப்போலே நிற்கும். அவ்வான்மாவின் சந்நிதியிலே அந்தக்கரணங்கள் இந்திரியாதிகளை அறிந்து புசியா நிற்கும். சிவன் அசிந்ததனுய் நிற்பன். அஃதறியும்

முறைமை, முட்டையானது அச்சு நிற்கத் தான் காரியப்படுவது போலாம். இவற்றை நடத்தும் ஆன்மாவின் ஆதி மலம் நீங்க வருங் காலம் கண்ணுடியின் ஒளிக்குள்ளே உருவம் தோன்றிஞற்போலச் சிவனுருவம் வெளிப்படும். வெளிப்படின் ஆன்மா அந்தச் சிவனுய் விடுவன். சிவனுய் விடவே, அளத்திற்பட்ட துரும்பு முதலிய யாவும் உப்பாய்விடுமாபோல ஆன்மாவும் கருவி கரணங்களும், பழைய கரணம் குலைந்து சிவகரணமாய் விடும். இதுவே முத்தி நெறி.

5. **ஈசுவர அவிகார வாத சைவம்:** பலதுளைக் குடத்தில் ஏற்றிய தீபம் போல ஆன்மா எங்கும் அறிவாய் நிற்கும். அப்படி நிற்குமாயினும், அவ்வப்பொறிகள் அளவாய் அல்லவற்றைக் கூடியறிந்து செல்லும். இந்த ஆன்மாவுக்கு மலபாகமும் சத்திநிபாதமும் உண்டாக, இருளுக்கு விளக்கேந்திக் காண வோட்டுவாரைப்போல ஞான விளக்கைச் சிவனருளாலே பெற்றுப் பொருளினலே அவாவுற்று மிகவோடி வெம்மையில் திரிந்தாெெருவன் மரநிழல் கண்டாறுவது போலத் திருவடி நிழலிலே ஆறும். இதுவே முத்தி நெறி.

6. **நிமித்த காரண பரிணும வாத சைவம்:** புவனம் யாவும் சத்தி வடிவு. அதுவொழிந்து அவ்வுடலோடு கூடிய அறிவும் அறிவாகக் காணப் படாது, சர்வமும் சிவனறிவேயாம். ஆகவே உயிர் சிவமும் உடல் சத்தியுமாம். இதுவல்லது ஆன்மா உண்டெனவும் ஆன்மாவைப் பற்றிய பாசம் உண்டெனவும் வேருகக் காணப்படுவதில்லை. அது பொன்னும் பணியும்போல. பொன்னின் தொழில்பணியாம். அதனுலே வேறொரு பொருளும் தனித்து நிற்கமாட்டாது. ஆதலால் சத்தி சிவ நடிப்பே சிவப்பிரபஞ்சம். சத்தி சிவ நீக்கமில்லை. அவ்வுடலே சத்தி சிவமென்று சொல்லுவது முத்தி.

**சுத்த சைவம்:** சைவ வாதம் எனவும் பெயர் பெறும். முன் குறிப்பிடப்பட்டது. இதன் கருத்துப் பின்வருமாறு. அறிவாய் நின்றறியும் ஆன்மா, கேவலத்தில் உற்றபோது ஒன்றும் விகற்பித்து அறியும் அறிவற்றிருக்கும். கலாதிகள் இங்கு வினைக் குறிப்பான பண்டம் போலவந்து கூட, அவற்றேடும் கூடி வினைப்பயன் தய்க்கும். அக்காலம் புண்ணிய பாவம் துலையொப்பாய் மலபாகம் உண்டாகவே சிவன் குருவடிவாய் வந்து அறிவிக்க அறிந்து, ஆன்மாவும் சிவனும் பிறிவற்று, இரண்டற்று எல்லாவற்றேடும் பேதமற்றிருப்பது என்பது இம்மதம்

சிவ பரத்துவத்தையும், முப்பொருளுண்மையையும் கூறுகின்ற அகச்சமயங்கள் ஆறும் அவற்றுக்கும் அதிகமான சைவவாதம் என்ற சமயமும் அகச்சமயப் பிரிவுகளாக இது வரை சொல்லப்பட்டன.

—வளரும்

# களந்தை நந்தீசுரர் பதிற்றுப் பத்தந்தாதி

மனமும் வாக்குமிக் காயமுந் தந்தது நினைக்கவும் வாழ்த்தவும்
வணங்கிச்
சினமுங் காமமு லோபமு மாளவத் தீமையு மாற்றுதற் கன்றோ
அனமு மேனமுங் காணடுங் களந்தைவாழ் ஐயன்நம் சுகலிங்கன்
இனமுங் கேள்மட நெஞ்சமே விழல்தனக் கேற்றமிட் டிறைத்
தாயே. 25

தாய்வயிற் றுதித்திடு முயிரனைத்தையுந் தனித்தனி யெடுத்தாற்றிக்
காய் முற்றுறு பொசிப்பையு மூட்டியே கடைக்கதி தருமொரு கடவுள்
தூய் நற்றவர் புகழ்களந் தாபுரிச் சுகலிங்கன் தொண்டரோ
டெண்ணி
நாயி னைப்பொரு ளாய்த்தடுத் தாண்டது நகையுடைத் திவ்வுல
கத்தே. 26

உலகெ லாமுணர்ந் தோதியு முணர்கிலா ஒருவனை உமையாள்முன்
அலகில் பூசனை புரிந்திடக் கம்பையா றணுகவுஞ்சலியாது
விலகி லாமயிற் றழுவமெய் குழைந்தருள் வியன்களந் தாபுரியதனிற்
குலவி வாழ்சுக லிங்கனென் றோர்மொழி கூறிடக் கெடுங்கொடு
வினையே. 27

வினை தொலைக்கவந் தெடுக்குமித் தேகத்தை விட்டிட நினையாதே
மனையு மக்களுஞ் சுற்றமுங் கண்டுநீ மகிழ்ந்தனை மடநெஞ்சே
அனையெனக்கெனுங் களந்தைவாழ் சவுந்தர வம்பிகைக் கொருபாகன்
தனைநிகர்க்கு மெய்சுகலிங்கன் அடியர்பாற் சார்ந்திடா வகை
என்னே. 28

என்ன மாதவம் புரிந்தனை யடியரோ டிருந்துகொண் டவர்முன்னே
சொன்ன வாசியைச் செவித்துநீர் களந்தை துடியிடை யழகம்மை
தன்னை யாளுடை நாயகன் சுகலிங்கன் தாட்டுணை தொழுதுய்ய
நன்னர் மெய் யுணர்வு வர்தது நெஞ்சமே நல்லநீதியை யுமன்றே. 29

அன்று செய்வது முளகொலோ நமன்படல் அணுகியைப் புலன்
களுங் கலங்கக்
கொன்று கைகளைத் தலைகொடு நமரங்கள் கோவெனத் தான்கூடி
நின்று தானமுந் தொழிலினி லமைகுவார் நீதுணை கொண்டா
ரன்(று)
இன்று நெஞ்சமே களந்தையிற் சுகலிங்கன் இணையடி தொழு
துய்யாய். 30

உய்மின் உய்மின் உலகத் துறுதவஞ்
செய்மின் செய்மின் திருவடிக் கர்ச்சனை
வைமின் அன்பு வளருங் களந்தைவாழ்
ஐயன் நம்சுக லிங்கனுக் காட்பட்டே. 31

ஆட்செ யார்மெய் யடியருக் கன்பிலார்
கோட்செய் மாதர் குழியி லழுந்துவார்
காட்செய் வேணிக் களந்தைச் சுகலிங்கன்
பாட்செய் சென்மம் பறிப்பதுமெங்கனே. 32

எங்கு மாகிய எண்ணில கோடியாஞ்
செங்க திர்ச்சுடர்ச் செல்வர்க் கிணையெனுந்
துங்கன் நங்களந் தைச்சுக லிங்கனை
செங்கண் மாலய னேடெண்ணல் சீர்த்ததே. 33

சீர்த்த வீரியர் செல்வமும் மேலர(சு)
ஆர்த்த வாழ்வும் அலக்க ணுறுமென்ற
கூர்த்த மாமறைக் கோன்களந் தைப்பதி
போர்த்து வாழ்சுக லிங்கனைப் போற்றுமே. 34

போற்றி போற்றி புராதன புங்கவன்
போற்றி போற்றி புகழ்களந் தைக்கிறை
போற்றி போற்றி புணர்சுக நாயகர்
போற்றி போற்றியென் பொல்லாங் ககற்றவே. 35

அகத்தி யர்முத லந்தணர் போற்றவும்
மகத்து வம்பெற வாழ்களந் தைப்பதி
இகத்து வாழ்வினில் இச்சை யுறுமலே
சுகத்தில் வைத்தா னிவன்சுக நாதனே. 36

நாத மாமறை நாலுங் கடந்தவன்
வேத மூலன் விளங்குங் களந்தையான்
பூத மைந்தும் அழியும் பொழுதினுஞ்
சாத லின்றிய தாட்சுக லிங்கனே. 87

சுகமுந் துக்கமு மொன்றெனத் தோன்றிப்பின்
சகமும் பொய்யெனக் கண்டவர் தானரோ
அகமும் கண்டுகொ ளண்ணல் களந்தையான்
இகமும் மேலும் இடுஞ்சுக வீசனே. 38

ஈச னென்றும் இழிவர வல்லிக்கு
நேச னென்றும் நிருமல னேயென்றும்
வாசந் தென்களந் தைச்சுக லிங்கனைப்
பேசும் வாய்கள் பெரிதும் மணக்குமே. 39

மணக்குங் கொன்றை மவுலிச் சடையினன்
குணக்குன் றம்மெளி யேன்செய்த குற்றமே
பிணக்குந் தீர்க்கும் பெருமான் களந்தையில்
இணக்கு மஞ்சுக லிங்கனெம் எந்தையே. 40

எந்தையாய் எவ்வுயிர்க்கும் உயிராய் நின்ற
எம்மானை அம்மானை எவர்க்கும் எட்டா
முந்தையா முதலுக்கு முதலாய்த் தோன்றும்
முக்கணனைப் பெருங்களந்தை மூதூர் தன்னில்
வந்தருளுஞ் சிவக்கொழுந்தைச் சுகலிங் கத்தை
வாழ்த்தாது வாழ்த்துகினும் வாழ்த்து வோர்க்கு
விந்தையா மல்லாது முடிவு முண்டோ
விழுத்துணையாம் வழித்துணையும் விரும்புவோர்க்கே. 41

விரும்புங்கா லவனடியே விரும்ப வேண்டும்
வேண்டுங்காற் பிறவாமை வேண்ட வேண்டும்
திரும்புங்கா லவன்கொலுவிற் றிரும்ப வேண்டும்
சேருங்கா லடியாரைச் சேர வேண்டும்
அரும்புநேர் முலையுமையாள் அழகாள் பங்கன்
ஆலால முண்டருளுங் களந்தைக் கோமான்
சுரும்புண்மா மலர்க்கொன்றைத் தொடையல் வேய்ந்த
சுகலிங்கன் தன்பெருமை சொல்லொ ணாதே. 42

சொல்லலாம் சொன்னபடி நிட்டை கூடிச்
சுவாசங்கள் உள்ளடக்கிச் சோதி கண்டு
வெல்லலாம் படிக்கரிய குறுப்பு நீக்கி
விளைந்தவா னந்தமதி லமுத முண்டு
நெல்லெலாம் விளைவயல்சூழ் களந்தை யூரின்
நிலையமதிற் குடியாம்நின் மலனை மீளா
அல்லெலாந் திரண்டகளச் சுகலிங் கத்தை
அடைந்தவற்கும் பிறப்போவா னந்த மாமே. 43

ஆனந்தப் பொருளாகி அதுவாய் நின்ற
அப்பாலைக் கப்பாலு மப்பா லாகி
வானந்த மண்ணந்த மாகி யந்த
மாணிக்க வொளியாகி மனேலயத்து
மோனந்த மனமுறுவோர் கண்டு கொண்ட
முதற் களந்தைச் சுகலிங்க மூர்த்தி எம்மான்
தானந்த மில்லாத நிலைமை காட்டித்
தன்னறிவாய் நின்றுதனை யறிவித் தானே. 44

அறிவினு லறிவிதனை அறிந்தே னில்லை
அளவைகளா லளப்பதனை அளந்தே னில்லை
குறியினுற் குறிப்பிதனைக் குறித்தே னில்லைக்
கோதிலாக் களந்தைநகர் கோயில் கொண்ட
மறியுலா மலர்க்கரத்தர் அழகாள் பங்கன்
மாலறியா மலர்ப்பதத்தை மறைநூல் சொல்லும்
நெறியினுர் சுகலிங்கப் பெருமா னென்முன்
நிற்பானே பொற்பொதுவில் நின்று ளானே. 45

நின்றுளான் கற்பங்க ளிறுதி தோறும்
நீக்கியுயிர் வர்க்கத்தை நிலைக்கச் செய்தே
இன்றுளான் அன்றுளான் என்று முள்ளான்
அவ்வகைக்குங் காரணமா யிருக்க வல்லான்
நன்றுளான் அரிதொன்றும் இல்லான் நல்லான்
நாவலவர் புகழ்க் களந்தை நகரான்வெள்ளிக்
குன்றுளான் சுகலிங்கப் பெருமான் தில்லைக்
கூத்துளா னெனையடிமை கொண்டு ளானே, 46

கொண்டல் நிறத் தவனெடுநான் முகனும் போற்றுங்
குழுவெலுப் புந் தலைக்கலனுங் குழைந்தே பூணும்
அண்டர்கோன் அண்டர்முதல் முனிவர் போற்றும்
ஆலால முண்டருளும் ஆதி மூர்த்தி
தொண்டைநா டினிற்கச்சிக் கடுத்த மேற்பால்
தொன்னகராம் களந்தையினிற் றேன்றி நின்ற
துண்டவான் பிறைக்கொழுந்தை யணிந்த வேணிச்
சுகலிங்கன் தனைநெஞ்சே தொழுதுய் வாயே. 47

# விடையரங்கம்

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

வினா :- 'விதிப்படிதான் எல்லாம் நடக்கும்' என்றால், கடவுளை வழி படுவதன் இம்மைப்பயன் என்ன? --முத்து. மெய்கண்டதேவன்.

விடை :-

Dr. டி. பி. சித்தலிங்கையா M. A. Phd.,

விதி, ஊழ், பால், தெய்வம், வினை எனப் பல்வேறு பெயர்களால் குறிக்கப்படும் அப்பொருளைப்பற்றி முதலில் அறிந்து கொள்ளவேண்டும். ஒவ்வொரு செயலுக்கும் ஒரு விளைவு உண்டு. பாலில் மோர் உறைகுத்தினால் தயிராகிறது. உறைகுத்துதல் செயல், தயிர் விளைவு. செயலும் விளைவுமே விதி எனக் குறிக்கப்படுகின்றன. தமது இன்பம் கருதிச் செய்யும் செயல், பிறருக்குத் துன்பமாக அமையலாம், அது தீவினை (பாவம்) ஆகிறது. தமது இன்பத்துக்காகச் செய்த ஒரு செயல் பிறருக்கும் இன்பம் ஏற்படுத்தலாம். இது நல்வினை (புண்ணியம்) எனப்படுகிறது. இவற்றின் தொகுதியே வினை. ஏற்கனவே தேடிச் சேர்த்த வினை பழவினை (சஞ்சிதம்.) அந்த வினையை நுகர்ந்தே (அநுபவித்தே) தீர்க்க வேண்டும். எனவே பிறவி எடுக்கிறோம், அந்தப்பிறவியில், ஒருபகுதி வினையைத் தீர்க்க எண்ணி வருகிறோம். அவ்வாறுகொண்டுவரும் வினைப்பகுதி நிகழ்வினை (பிராப்தம்) அந்த வினையைக்கழிக்க வந்த பிறவியில் செயல்கள் நிகழ்கின்றன. அந்தச் செயல்களின் விளைவாக நன்மை தீமைகள் மீண்டும் ஏற்படுகின்றன, வந்து சேருகின்றன. அவை தொடர் வினை, எதிர்வினை (ஆகாமியம்) எனப்படும்.

ஆகாமியம் வாராமல் தடுத்து, பிராப்தத்தை அநுபவித்துக் கழிக்க, சஞ்சிதம் குறையும், வற்றிப்போகும். திருவருளால் இந்த நிலை ஏற்படும். அப்போது முன்னை வினை அழியும், பின்னைவினை வராமல் போகும். "முன்னைவினையின் முடிச்சை அவிழ்ப்பார்கள், பின்னை வினையைப் பிடித்துப் பிசைவார்கள்" - என்று திருமூலர் இதனைக் குறிப்பிடுகிறார்.

பிராப்தம் (நிகழ்வினை-இம்மை வினை) அநுபவத்தே தீர்க்கவேண்டிய ஒன்று, இந்த அநுபவத்தில் (இன்ப, துன்ப நுகர்ச்சிகளில்) தான் தாக்கப்படாமல் இருக்க, இறையருள் துணைபுரிகிறது. தடுப்பு மருந்து ஏற்றிக்கொண்டவன் அஞ்சாது தொற்று நோயாளரிடையே சென்று பணிபுரிவதும், அதனால் அவன் தாக்கப்படாமல் இருப்பதும் போன்றது

இங்கு நிலை. கடவுளை வழிபடுவதால் முன்னைவினையும் பின்னை வினையும் கழியும். இம்மை வினையின் தாக்குதல் குறையும்; அதைத் தாங்கும் ஆற்றலும் பெருகும். அதனால் துன்பமோ சோர்வோ இல்லாது நிற்கும் நிலை தோன்றும். எனவே கடவுள் வழிபாடு இன்றியமையாததாம். மேலும் முன்வினையின்படி, சில பொருள்கள் அமையாவிட்டாலும் கூட இறையருளால் அவை ஏற்பட வழியுண்டு.

''இம்மையே தரும் சோறும்
கூறையும் ஏத்தலும் இடர்
கெடலுமாம்
அம்மையே சிவலோக
மார்வற்கு யாதும் ஐயுற
வில்லையே''

என்னும் சுந்தரமூர்த்தி சுவாமிகளின் திருவாக்கு இதற்கு விடை தருகின்றது.

பேராசிரியர்,
க. வெள்ளைவாரணன்

உயிர்கள் செய்த நல்வினை தீவினை என்னும் இருவினைக்குரிய இன்பத் துன்பங்களாகிய பயன்களைச் செய்தஉயிர்களே நுகரும்படி ஊட்டுவிப்பவன் இறைவனே என்பது சைவசித்தாந்தக் கொள்கையாகும். இருவினைப்பயன்களாகிய இன்பத் துன்பங்களை வினைசெய்த உயிர்களே நுகரும்படி வகுத்து நடத்தும் இறைவனது முறைமையே ஊழ் எனவும் விதி எனவும் கூறப்படும். இவ்வுலகினை இயற்றிய இறைவனை வகுத்தான் எனவும் உயிர்கள் செய்த வினைக்கேற்ப அவ்வவ்வினைப்பயன்களை அவ்வவ்வுயிர்களே நுகருப்படி வகுத்து நுகர்விக்கும் இறைவனது நியதியாகிய முறைமையினை வகுத்தான் வகுத்தவகை எனவும் திருவள்ளுவர் குறிப்பிடுவர். ஊழைப்பற்றித் திருவள்ளுவர் அறிவுறுத்திய இக்கருத்தினை ''யாழின் மொழி மங்கை பங்கன் சிற்றம்பலத்தான் அமைத்த ஊழின் வலியது ஒன்று என்னை ?'' (350) எனவரும் திருக்கோவையாரில் மணிவாசகப் பெருமான் நன்குவிளக்கியுள்ளார். எனவே ஊழ்என்பது இறைவனது ஆணையின் வழிப்பட்ட முறைமையே என்பதனை நன்குணர்ந்து இருவினைப் பயன்களையும் விருப்பு வெறுப்பின்றி நுகர்தலே உலகியல்நெறி முறையாகும். 'தீதும் நன்றும் பிறர் தரவாரா' என்னும் தெளிந்த சிந்தையுடன் இருவினைப்பயன்களையும் ஒப்பநுகரும் அநுபவத்தால் நல்லதன் நலனும் தீயதன் தீமையும் இனிது புலனுகும். அதன்பயனாகத் தம் மனத்தினைச் சென்றவிடத்தாற் செலவிடாது தீயவற்றின் நீக்கி நன்றின்பாற் செலுத்தும் நல்லறிவு தோன்றும். நல்லறிவுதோன்றவே மனமாசு நீங்கி யான் எனது என்னுஞ் செருக்கற்று வானோர்க்குயர்ந்த உலகாகிய வீடுபேற்றைய் தற்குரிய வாய்ப்புளதாகும்.

மனவுணர்வினராகிய மக்கட் குலத்தார் தம்மாற்செய்யப்பட்ட

நல்வினையின் பயனாகிய இன்பத்தைப் போலவே தாம் செய்த தீவினையின் பயனாகிய துன்பமும் தம்மால் நுகர்தற்குரியதே என்னுந் தெளிவுடையராதல் வேண்டும் என்பதனை,

நன்றாங்கால் நல்லவாக்
காண்பவர் அன்றாங்கால்
அல்லற் படுவ தெவன் (379)

எனவரும் திருக்குறளில் தெய்வப் புலவர் திருவள்ளுவர் அறிவுறுத்தியருள்கின்றார். இக்கருத்துப்பற்றியே செம்புலச் செல்வராகிய திருநாவுக்கரசரும் 'ஈண்டுவரும் வினைகளுக்கு எம்பிரான் உளன் என்று இசைந்திருந்தார்' (பெரிய - திருநாவுக்கரசர் 94) என அறிகின்றோம்.

'இதம் அகிதங்கள் எல்லாம்
இறைவனே ஏற்றுக்
கொண்டு இங்கு
இதப் அகிதத்தால் இன்பத்
துன்பங்கள் ஈவன்'(சுபக்-103)

என்பது சிவஞானசித்தியார்.

முன்னைப் பிறவிகளில் உயிர்களால் செய்யப்பட்டு அவற்றின் பயன் நுகரப்படாமல் சேர்ந்துள்ள பழவினைத்தொகுதி சஞ்சிதம் எனப்படும் அவற்றுள் இந்தப் பிறப்பில் அநுபவித்தற்கென நாம் பெற்றுள்ள உடம்பினால் முகந்து கொள்ளப்பட்ட வினைப் பகுதி பிராரத்தம் (நுகர்வினை) எனப்படும். இப்பிறப்பில் பிராரத்தவினையை அநுபவிக்கும் போதே அவ்வநுபவத்தில் தோன்றும் விருப்பு வெறுப்புக் காரணமாக இடையே வந்து சேரும் நுண்ணிய வினை ஆகாமியம் (வருவினை) எனப்படும். இம் மூவகை வினைகளுள் பழவினைத் தொகுதியாகிய சஞ்சிதம் குருவே சிவன் எனப் போற்றத்தக்க நல்லாசிரியரது அருள் நோக்கு, உபதேசம் முதலிய தீக்கை முறைகளாற் கெட்டொழியும். நுகர்வினையாகிய பிராரத்த வினை எடுத்துள்ள இவ்வுடம்போடு கழிந்துபோம். வினை நுகர்ச்சியில் விருப்பு வெறுப்புக் காரணமாக நுண்ணிதாக வந்து சேரும் ஆகாமிய வினை இறைவனருளால் தோன்றும் மெய்யுணர்வாகிய சிவஞானத்தால் வெந்து நீறும் என்பது சிவநெறிச்செல்வர் துணிபாகும்.

ஊழ்வினைப்படியே எல்லாம் நடக்கும் என்பது உலகில்வாழும் மன்னுயிர்கள் எல்லாவற்றுக்கும் உரிய பொது விதியாகும். இவ்வுலகில் நாம் அனுபவிக்கும் இன்பத்துன்பங்களுக்குக் காரணம் நாம் முன்னர்ச்செய்த இருவினைத் தொகுதியே என்னும் உண்மையினை யுணர்ந்து, தாம் செய்த பிழைகளைநினைந்து, இரங்கி, மனங் கசிந்து இறைவனை வழிபாடு செய்வோர் உலகில் வாழும் ஏனையோரைப்போன்று ஊழ் வினையால் தாக்குண்ணாது ஊழையும் உப்பக்கங்கண்டு உய்தி பெறுவர் என்பது கடவுள் வழிபாட்டில் உறைத்து நிற்போர்க்குரிய சிறப்பு விதியாகும். இந்நுட்பம்,

இருள்சேர் இருவினையுஞ்
சேரா இறைவன்
பொருள்சேர்புகழ் புரிந்தார்
மாட்டு (திருக்-5)

எனவரும் உலகப் பொதுமறையில் இடம் பெற்றிருத்தல் காணலாம்.

கொலையிற் கொடியாரை வேந்தன் ஒறுத்தல் அரசியற் பொதுவிதி, ஆயினும் தாம்செய்த குற்றம் உணர்ந்து வருந்தித் திருந்திய உள்ளத்தினர்க்கு வேந்தன் ஒறுத்தலாகியதண்டனையைக் குறைத்தலும், முழுதும் விலக்களித்தலும் அரசியற் சிறப்பு விதியாகும். பொதுவும் சிறப்புமாகிய இவ்விதிமுறைகள் எல்லா நாடுகளிலும் எல்லாக் காலங்களிலும் உலகியல் நடைமுறைகளில் தொடர்ந்து இருந்து வருதல் காணலாம். அதுபோலவே உலக முதல்வனாகிய இறைவனது அருளாட்சியிலும் உயிர்கள் செய்த வினைகளுக்குரிய பயன்களைச் செய்தவுயிர்களே தப்பாமல் நுகர்தற்குரிய பொதுவிதியும். தம்பிழைக் கிரங்கி மனந்திருந்தித் தன்முனைப்பற்று இறைவனது அருள்வழி உறைத்து நிற்பாரை ஊழ்வினைப் பயன் தாக்காதவாறு ஆதரித்து உய்வித்தலாகிய சிறப்பு விதியும் தொடர்ந்துநிலைபெறுதல் முறையாகும்.

உயிர் போகும் போது நெறியாகிய உலகியற்பாசப்பிணிப்பில் அகப்படாது சிவனருளில் ஒன்றி வாழும் அன்புடைய அடியார்களை சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியம் என்னும் மூவகை வினைகளும் வருத்துதல் இல்லை என்பது,

அல்லல் என்செயும்
அருவினை என்செயும்
தொல்லை வல்வினைத்
தொந்தந்தான் என்செயும்
தில்லை மாநகர்ச்
சிற்றம்பல வனார்க்
கெல்லை யில்லதோர்
அடிமைபூண் டேனுக்கே.
(5-1-2)

எனவரும் அப்பர் அருள் மொழியால் இனிது விளங்கும். அல்லல் - பிராரத்தம்-அருவினை-ஆகாமியம் தொல்லைவல்வினை - சஞ்சிதம், எல்லாம்வல்ல அருளாளனாகிய இறைவனை வழிபடுதலால் இப்பிறப்பிலேயேவினைத்தொடர்பின் நீங்கி உய்தி பெறலாம் என்பது சிவனருள் பெற்ற செம்புலச்செல்வர்களாகிய திருமுறையாசிரியர்களது அருளநுபவ உண்மையாகும்.

அவ்வினைக் கிவ்வினை யாமென்று
சொல்லும் அஃதறிவீர்
உய்வினை நாடாதிருப்பதும்
உந்தமக் கூனமன்றே
கைவினை செய்தெம் பிரான்கழல்
போற்றுதும் நாமடியோம்
செய்வினை வந்தெமைத் தீண்டப்
பெறுதிரு நீலகண்டம்.
(1-116-1)

என ஆளுடைய பிள்ளையார் ஆணையிட்டருளிய அருளுரையாலும்,

இம்மை அம்மை என
  இரண்டும் இவை
மெய்ம்மை தானறியாது
  விளம்புவர்
மெய்ம்மையால் நினைவார்கள்
  தம் வல்வினை
வம்மின் தீர்ப்பர்கண்டீர்
  மாற்பேறரே. (5-26-4)

என ஆளுடைய அரசர் உலகமக்களை அழைத்துக் கூறும் உறுதி மொழியாலும்,

'ஒருவனுர் அடியாரை ஊழ்வினை
  நலிய வொட்டாரே' (7-76-1)

என நம்பியாரூரர் அருளிய வன்புறையாலும் இவ்வுண்மை நன்கு வற்புறுத்தப்பெற்றமை காணலாம்.

இவ்வாறு உலகியலில் நேரும் துன்பங்களை யெண்ணிச் சிறிதும் மனஞ் சலியாது ஊனமொன்றில்லா ஒருவனுக்கு ஆட்பட்ட உத்தமராய் இறைவனை வழிபடும் இயல்புடைய அடியார்கள் மதி நலத்தால் விதியினை வென்று உய்திபெறுவார்கள் என உலகப் பொதுமறையாகிய திருக்குறளும் சைவத் திருமுறைகளும் தெளிவாக விளக்குதலால், கடவுளை வழிபடுவதனுல் வரும் இம்மைப் பயன் ஊழ்வினைத் துன்பங்களிலிருந்து விடுபட்டு உய்திபெறுதலே என்பது நன்குபுலனுகும்.

சும்மா தனுவருமோ
  சும்மா பிணிவருமோ
சும்மா வருமோ
  சுகதுக்கம் — நம்மால்முன்
செய்த வினைக்கீடாச்
  சிவனருள்செய் விப்பதென்றால்
எய்தவனை நாடி இரு.
(சிவபோகசாரம் - 101)

எனத்தருமையாதீனக் குருமுதல்வர் குருஞானசம்பந்தரும்

சிவாய நமவென்று
  சிந்தித் திருப்போர்க்(கு)
அபாயம் ஒரு
  நாளுமில்லை — உபாயம்
இதுவே மதியாகும்
  அல்லாத வெல்லாம்
விதியே மதியாய் விடும்.
(நல்வழி - 15)

என ஔவையாரும் அருளிய பொருளுரைகள் இங்குஒப்புநோக்கிச் சிந்தித்தற்குரியனவாகும்.

---

தத்துவச் சிறுகதை




— 'கண்ணபிரான்' —

அவர் விழிகளை மூடியபடி முதுகுத் தண்டின் அடியில் உள்ள கூர்ம அமைப்புக்கு மேலே உள்ள ஹோம குண்டத்தில் பஞ்சேந்திரியங்களைக் கட்டுப் படுத்தி சுக்கிலமாகிய நெய்யினை ஆகுதி செய்து தீயைக் கிளப்பி நாடி நரம்புகளை அடக்கி சமிதுகளாக்கி கொழுந்து விட்டெரியும் படிப் பெய்து......

.. ஓ... பாதி வேள்வியில் மனமாகிய அரக்கர் தலைவன் ஆசை, காமம், ஆணவம் மாயை, சலிப்பு, களைப்பு, அவநம்பிக்கை முதலான தன் பரிவாரங்களை அனுப்பி அவரின் பஞ்சேந்திரியங்களைத் தளர்த்தி நாடி நரம்புகளை முடுக்கி விழ் மலரச் செய்து............

வேள்வி பாதியில் நின்று விட்டது. இது எத்தனையாவது முறை என்று அவருக்கே தெரியாது. ஒவ்வொரு முறையும் இப்படித் தான் வேள்வி தடைபட்டது. அவரின் மனமே அவருக்கு எதிரி, அரக்கன், மாபாவி.

வேள்வி முடிந்தால் அப ர்தம் வெளிப்படும். அவர் பருகலாம். பின்பு அவருக்கு இறப்பு என்பதே இல்லை; பிறப்புமில்லை.

வேள்வி முடிந்தால் மிகுந்த தேஜஸ் ஏற்படும். அவரைக் கண்டவர்கள் மயங்கி அடங்கிப் போவார்கள். நச்சரவங்களும் நடுநடுங்கி ஓடிஒளியும், துட்ட மிருகங்களும் சாதுவாகி விடும்.

வேள்வி முடிந்தால் அவர் தம் கூட்டினின்றும் தம் ஆவியைப் பிரித்துக் கொண்டு விண்ணுக்கும் மண்ணுக்கு அடியிலும் சென்று அற்புதங்களைக் காணலாம். அதாவது பத்துத் திசைகளிலும் ஆவியாகிய ரதத்தை ஓட்டலாம். விண்ணில் உள்ள அமைப்புகள் பற்றி மண்ணில் உள்ள பொருள்கள் மரம் செடி கொடி புற்பூண்டுகள் பற்றி அவற்றின் தன்மைகள் குணாதிசயங்கள் பற்றி அறியலாம்.

வேள்வி முடிந்தால் தானே.
ஏ...மனமாகிய அரக்கனே!
நீயேன் இப்படிச் செய்கிறாய்.
அவர் நொந்து கொண்டே
விழுந்து புரண்டு அரற்றினார்.
எழுந்தார்.

'அரக்கர்களே! உங்களை அடக்கி அழித்து என்வேள்வியை முடிக்கா மல் விடப் போவதில்லை'

அவர் பிரதிக்ஞை செய்தார்.

அவர் அலைந்தார். பலரிடம் மனதை அடக்க வழிகேட்டார். பலன் இல்லை.

ஒருநாள் மிக அமைதியாக சிந்தனையில் ஆழ்ந்திருக்கும்போது தன் மூதாதையர்களின் நினைப்பு வந்தது.

அவர்களை மறந்து அவர்களைத் துதிக்காமல் தாம் வேள்வி செய்யத் தொடங்கிவிட்டோமேஎன்று எண்ணினார்.

உடனே கொஞ்சம் மண்ணை குத்துக பிடித்து வைத்து மூதாதையர்களின் மொத்த உருவாகப் பாவித்து துதிக்க ஆரம்பித்தார்.

,உங்கள் ஆற்றல் முழுவதும் எனக்குக்கிடைப்பதாக. உங்களின் துணை கிடைப்பதாக. கருணையும் சக்தியும் கிடைப்பதாக. இனி உங்களை ஒரு போதும்

மறவேன் மறவேன் மறவேன்

திடீரென்று அவரின் செவிகளில் ஓர் அசரீரி கேட்டது.

'சிவ...சிவ.. சிவ'

அ வர் முகமலர்ந்தார். ஓ... இந்த 'சிவ' என்னும் மந்திரச் சொல்லுக்கு அவ்வளவு சக்தியா!

உடனே சிவ சிவ சிவ என்று சொல்லத் தொடங்கினார்.

அவர் உடல் முழுவதும் ஒரு வகை புதிய ஆற்றல் ஊடுருவியது போல்......

நாடி நரம்புகளில் புது வகையான சக்தி ஊடுருவி நர்த்தனமாடுவது போல்.........

லட்சக்கணக்கில் ஒருநிலைப்பட்டு மொழிந்தார்.

அவர் ம று ப டி வேள்வியைத் தொ ட ங் கி ஞ ர். வேள்வியின் போதும் 'சிவ' மந்திரத்தை உள் மூச்சில் வாங்கி கும்பகம் செய்தார்.

மூதாதையர்களைத் து தி த் து விட்டுத்தான் தொடங்கினார்.

மனம் அனுப்பிய பரிவாரங்களைப் பாவி கூட்டங்களை 'சிவ' அழித்தது. பஞ்சேந்திரியங்கள் கட்டுப் பட்டே இருந்தன நாடி நரப்புகள் அடங்கியே கிடந்தன. அமிர்தம் பொங்கியது. வேள்வி முடிந்தது.

அவர் பின்பு அமிர்தம் உண்ட சக்தியினால் தம் ஆவியைப்பிரித்து கிரகங்களின் அமைப்பை அறிந்து கொண்டதால் யோக நாளில் யோக நேரத்தில் தம் மனைவியுடன் சுகித்து பத்தாம் மாதம் ஐந்து கிரகங்கள் உச்சமாக இருக்கும் போது ஒரு ஆ ண் ம க வை யு ம் அடைந்தார்.

'சிவ' என்னும் மூல மந்திரத்தின் ச க் தி யு ட ன் ஆற்றலுடன் பிறந்ததால் 'சிவா' என்று பெயரிட்டார்.

## உங்கள் ஜன்ம நட்சத்திரம் என்று வருகிறது?

உங்கள் ஜன்ம நட்சத்திரம்வரும் நாளில் ஆண்டுதோறும்—உங்கள் பெயரில் ஒரு புண்ணியகாரியம் நடைபெறவேண்டும். உங்கள் பெயர், முகவரி, பிறந்த மாதம் - (தமிழில்), நட்சத்திரம் ஆகிய குறிப்புக்களுடன் ரு. 110-க்கான காசோலேயும் அனுப்புங்கள். ஆண்டுதோறும், அந்தமாதம் அந்தநாளில் தஞ்சை மாவட்டம் கதிராமங்கலம் ஸ்ரீ வநதுர்க்காபரமேஸ்வரிக்கு அபிஷேக அர்ச்சனை செய்து பிரசாதம் உங்கள் முகவரிக்கு அனுப்பப்பெறும். உங்களுக்கும் ஒரு முக்கியமான கடமையுண்டு. உங்கள் முகவரி மாற்றங்களை (மாற்றங்கள் இருந்தால்) அவ்வப்போது தெரிவிக்க வேண்டும். இந்தத் திட்டத்தில் நீங்கள் பங்குகொள்ள விரும்பும் விருப்பத்தின் வேகம் உங்கள் அதிர்ஷ்டத்தின் வேகத்தைப்பொருத்தது. தொகையும் விவரங்களும்அனுப்பவேண்டிய முகவரி:-

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள்,

அதிபர், ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள். 612 504.

# திருவிளையாடற் புராணம்

## உரை நடை

சிங்கம்போன்ற வலனை நோக்கி, ''வெற்றி மிகுந்தவனே! வருக! நின் தோள் வலிமையும் வெற்றிப் புகழும் எத்திசைகளிலும் பரவியுள்ளன; அப்புகழ்ச்சியைக் கண்டு மகிழும் நான், உனக்கு ஏற்ற வரம் அளிப்பேன்; ஆதலால், நீ வேண்டிய வரம் யாதோ? அதனைக் கேள்'' என்றான். இந்திரன் கூறியதைக்கேட்ட வலன் இருகையினையும் புடைத்து உடல் நிமிர்ந்து இடிபோல நகைத்து இகழ்ந்து அவனை நோக்கி, ''நீ எவரும் நகைக்கும்படி கூறியது மிக நன்று! நீ என்னைப் புறங்கண்ட வெற்றியும், அதனால் பெற்ற கீர்த்தியும், நின் பெருமிதமும் இன்று நீ என்னோடு செய்த போரில் காணப்பட்டனவல்லவோ? இவற்றால் உன்புகழ் எங்குப் பரவி நிலைபெற்றுள்ளது; இதுபோலவே உன்கொடையும் நிலை நிற்கும்; சிவபெருமான் எனக்கு அருளிய நல்ல வரங்கள் இருக்கவும், அவற்றிற்கு வேறாக நான் உன்னிடம் பெறத்தக்க வரம் ஒன்று உண்டோ? என்னிடம் உனக்கு வேண்டியது யாது? கேள்; அதனை இப்பொழுதே கொடேனாயின், இப் போர்க்களத்தில் உன்னைப்போன்றே தோற்ற பழியாகிய புகழைப் பெற்றவனாவேன்'' என்று உறுதி கூறினான்.

வலாசுரன் வார்த்தையினைக் கேட்ட இந்திரன் பெருமகிழ்ச்சி கொண்டு, ''வலனே! நான், மேருவை வில்லாகக்கொண்டு திரிபுரத்தை அழித்த சிவபெருமான் எழுந்தருளிய வெள்ளிமலைச் சாரலை அடைந்து, அங்கு ஒரு வேள்வியினைச் செய்வேன்; அப்போது தேவர்களுக்கு அவியூட்ட நீ வேள்விப் பசுவாகி விரைந்து வருதல் வேண்டும்'' என்றான். இந்திரன் வேண்டியதைக் கேட்ட வலாசுரன், ''ஒரு காலத்தில் [1] ததீசி முனிவர் தம் பூத உடலில் முதுகெலும்பு ஒன்றே உனக்கு வச்சிரப்படையாக அளித்துப் புகழுடம்பு ஒன்றே பெற்றார்; பிறரை வெல்லும் வெற்றியினாலும், பிறரால் அழியாத உடல் முழுதும் நவமணிகள் ஆகுமாறு இறத்தலாலாகும் கொடையினாலும்

---

1. ததீசி முனிவர் - இவர் அதர்வ ரிஷிக்கும் சாந்தி என்பவளுக்கும் உதித்த குமாரர். இவருக்குத் 'தத்தியங்கர்' என்ற ஒரு பெயரும் உண்டு. இவர் தவத்தில் வலியவர்; தக்கனுக்கு நல்ல அறிவுரைகளைக் கூறியவர்; அருள் உடையவர்.

என்னைப்போல் அம்முனிவனுக்குப் புகழுடம்பு இரண்டு உள்ளனவோ? நீ எனக்குப் பகைவன் அல்லை; நீயே நண்பன், தேவர்களனைவரும் உண்ணும் இயல்பினால் புண்ணியமும் புகழும் உனக்கு உளவாகப் பசுவின் வடிவாகி வருதி என்றாய்! அங்ஙனமே வருவேன்!'' என்று மொழிந்தான். என்றென்றும் ஈவதே பெருமை அல்லாமல் இரத்தல் இழிபல்லவா?[1]

வலன் வேள்விப் பசுவாக வந்து மடிந்து பிரமன் உலகடைதல்

இந்திரன் விருப்பத்திற்கிணங்கிய அவுணர் தலைவனாகிய வலன், இந்திரனை முன்னே அனுப்பிவிட்டுத் தன் புதல்வனுக்கு அரசுரிமையை அளித்துவிட்டு வேத நூலில் கூறிய முறைப்படி இலட்சணம் அமைந்த பசுவாகித் தேவர்கட்கு அவியுணவு ஆக்கும் வேளவிச்சாலையின்கண் வந்து அசையாது நின்றான். அப்போது இந்திரன் வலனை நோக்கி, ''உன்னைப்போல் வாய்மையால் புகழ்பெற்ற வள்ளல் யார்?'' என்று வியந்து கூறினான். செருக்கினை மேற்கொண்ட வலன் மேருமலையோடு பகைத்து ஓங்கிய விந்தமலைபோல உயர்ந்து, ''வேள்விக்குப் பயன் படும் என்னை யூபத் தம்பத்தோடும் கட்டுங்கள்'' என்று கூறி அதனை அடுத்து நின்றான். உடனே தேவர்கள் தருப்பைக் கயிற்றால் வலனாகிய பசுவை வேள்வித்தூணோடு சேர்த்துக்கட்டினர்; பிறகு சிலம்பி நூலினால் கட்டப்பெற்ற ஆண் சிங்கம் போல நின்ற அவன் வாயினைப் பொத்தி, மூச்சு அடங்கக் கொன்றனர். இறந்த வள்ளலாகிய வலாசுரனும், கற்பக மலர்மழை பொழிய இந்திர விமானத்தில் ஏறி நான் முகன் உலகத்தை அடைந்தான்.

பிறகு இந்திரன், தூணிலே கட்டி உயிர்போக்கப்பட்ட வள்ளன் மையும் பெருந் தகுதியும் உடைய வலனாகிய பசுவினிடத்திருந்து வச்சிரப் படையினால் வபையினை எடுத்து வேள்வித் தீயானது முன்னே சுவைபார்க்க இட்டு, அதன்பின் குறிப்பிட்ட தேவர்களுக்கு உண்பித்து வேள்வியைச் செய்து முடித்தான்.

நவமணிகளின் தோற்றம்

வேள்விப் பசுவாய் வந்து உயிர் நீத்த வலாசுரனின் இரத்தமே மாணிக்கம்; பற்களே முத்து; மயிரே வயிடூரியம்; எலும்பே வயிரம்;

1. இங்கே, ''நல்லா றெனினுங் கொளல் தீது; மேலுலகம், இல்லெனினும் ஈதலே நன்று'' என்னும் திருக்குறளும், ''ஈயென இரத்தல் இழிந்தன்று......கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தன்று'' என்னும் புறநானூற்று அடிகளும் கருதற்பாலன.

பித்தமே மரகதம்; வெள் நிணமே கோமேதகம்; தசையே பவளம்; கண்களே நீலம்; கோழையே புருடராகம். இவையே நவமணிகள் தோன்றிய முறைமை ஆகும்.

அத்தகை ஆவின் சோரி மாணிக்க மாம்;பல் முத்தம்;
பித்தைவை டூயம்: என்பு வச்சிரம்; பித்தம் பச்சை;
நெய்த்தவெண் ணிணங்கோ மேதம்; தசைதுகிர்; நெடுங்கணீலம்!
எய்த்தவை புருட ராகம்; இவைநவ மணியின் தோற்றம்.

இவ்வாறு வடிவங்களை எடுத்துத் தோன்றி ஒளிவிடும் நவமணிகள் தோன்றும் இடங்களையும், அவற்றின் நிறங்களையும், சாதியினையும், தெய்வத்தையும், ஒளியினையும், ஆராய்ந்து குற்றங்களை நீக்கி நல்லன வற்றை உடலில் அணிகின்றவர் அடையும் பயனையும் முறைப்படி கேளுங்கள் :

1. மாணிக்கம்

மாணிக்கம் கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் என்னும் நான்கு யுகங்களிலும் முறையே மக்கம், காளபுரம், தும்புரம், சிங்களம் என்னும் நான்கு இடங்களிலும் தோன்றும். இது, தாமரை மலர், மாதுளம் பூ, மாதுளைவிதை, நெருப்பு, செங்கழுநீர்ப் பூ, மின்மினிப் பூச்சி, நாரத்தம் பழம், தீபம், இந்திரகோபம் என்னும் ஒன்பது வகை நிறங்களில் ஒன்றைப் பொதுவாகக் கொண்டு திகழும்.

இந்த மாணிக்கம் [1]சாதரங்கம் (பதுமராகம்) குருவிந்தம் (இரத்த விந்து), சௌகந்திகம் (நீலகந்தி) கோவாங்கம் (படிதம்) என்ற பெயர் களால் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்னும் நான்கு சாதியாக விளங்கும். அவற்றுள் சாதரங்கம் என்னும் பதுமராகம் என்ற சாதி: தாமரை மலர், கருநெய்தல் மலர், கதிரொளி, நெருப்பு, மின்மினி, மாதுளம் பூ, மாதுளை வித்து, [2] மேகம், தீபம், இந்திரகோபம் என்னும் பத்து வகை நிறங்களில் ஒன்றைக்கொண்ட

---

1. இங்கு, ''பதுமமும் நீலமும் விந்தமும் படிதமும் விதிமுறை பிழையா விளங்கிய சாதியும்'' என்று சிலப்பதிகாரம் கூறுவதை அறிக. இந்நால்வகைச் சாதியில் குருவிந்தம் தவிர மற்றைய சாத ரங்கம், சௌகந்திகம், கோவாங்கம் என்னும் மூன்றும் சிறிது சிறிது உருவு திரிந்தே காணப்படுகின்றன என்பர்.

2. இங்குக் கல்லாடம் என்ற நூலில் மேகத்திற்குப் பதில் சாதகப் பறவையின்கண் என்று கூறப்பெற்றுள்ளது.

தாகும். குருவிந்தம் என்னும் இரத்தவிந்து என்ற சாதி: குன்றிமணி, முயலிரத்தம், [1] வெள்ளலோத்த மலர், பலாசமலர், மஞ்சாடி மலர், [2] செவ்வரத்த மலர், முள்ளிலவ மலர், பொன் என்னும் எட்டு வகை நிறங்களில் ஒன்றைப்பெற்றதாகும். சௌகந்தி என்னும் நீலகந்தி என்ற சாதி: இலவமலர், குயிலின்கண், அசோகந்தளிர், செம்பஞ்சு, [3] பொன், மருதோன்றி என்னும் ஆறுவகை நிறங்களில் ஒன்றைக் கொண்டதாகும். கோவாங்கம் என்னும் படிதம் என்ற சாதி: குராமலர், [4] குசும்பைமலர், செங்கல், கொவ்வைக் கனி என்னும் நான்குவகை நிறங்களில் ஒன்றைப் பெற்றதாகும்.

### மாணிக்கத்தை அணிவதால் ஏற்படும் பயன்கள்

பதுமராகம் திட்பமுடையதாக அமைந்து மேற்புறமாக ஒளி வீசினுல் உத்தமம் என்றும், பக்கங்களில் ஒளி வீசினுல் மத்திமம் என்றும், கீழ்ப்புறமாக ஒளி வீசினுல் அதமம் என்றும் கூறுவர். இதனை அணிவோர் கல்வி, பசு, கன்னி, அறுசுவை உணவு முதலான தானங்களையும், அசுவமேதயாகம் செய்த பயனையும் அடைவர். குருவிந்தம் தரிப்போர் உலக முழுவதையும் ஒரு குடை நிழலின்கீழ் ஆள்வர்; நிறைந்த செல்வத்தோடும், சிறந்த வெற்றியோடும் வாழ்வர். சௌகந்திகம் அணிவோர் செல்வமும் புகழும் பெற்று வாழ்வர். கோவாங்கம் பூண்பவர் வீடுகளில் பால்வளமும் நெல்வளமும் பெருகுவதோடு செல்வப் பெருக்கமும் உண்டாகும். குற்றங்களின்றிக் குணமிகுந்து ஒளி வீசும் சிவந்த பதுமராக மணியை அணிகின்றவரிடத்து மற்றைய முத்து முதலிய பலமணிகள் வந்து

---

1. வெள்ளலோத்தம் - விளா; ஒரு துவர் மரமுமாம். இதனைக் கல்லாட நூலோர் 'உலோத்திரம்' எனவழங்குர்.

2. இங்குச் செவ்வரத்தமலர், முள்ளிலவமலர், பொன் இவற்றிற்குப்பதில் முறையே செம்பருத்திப் பூ, சிந்தூரம், குக்கிற்கண் இவற்றைக் கொள்க எனச் சில நூலும், முள்ளிலவ மலர், பொன் இவற்றிற்குப் பதிலாக முறையே செம்பஞ்சு, சிந்தூரம் இவற்றைக் கொள்க எனக் கல்லாட நூலும் கூறும்.

3. இங்குப் பொன், மருதோன்றி என்பவற்றிற்குப் பதிலாக முறையே பாசமலர், குவளைமலர் என்ற இவற்றைச் சில நூலும், செம்பு, அலரி என்ற இவற்றைக் கல்லாட நூலும் கூறும்.

4. இங்குக் குசும்பை மலருக்குப் பதில் மஞ்சளைக் கூறிக் குங்குமம் ஒன்று அதிகமாகக் கல்லாட நூல் கூறுதல் அறிதற்பாலது.

சேரும்; அதற்கேற்பத் திருமகளோடு நற் செல்வமும் பாற்கடலைப் போல வளரும்.

### மாணிக்கத்தின் குற்றங்கள்

அவ்வவற்றிற் குரிய நிறமொழிந்த வேறு நிறம், புள்ளி, காக பாதம், கீற்று (தாரை), தராசம் (ஒளிசலித்தல்) என்னும் [1]ஐவகைக் குற்றங்களை ஒழித்துக் குணம்நிறைந்த மாணிக்கத்தை அணியும் அரசன் பகையரசனின் வாளினல் ஊறுபடாது வெற்றியோடு விளங்குவான். அவன் பாம்பு, சிங்கம், புலி முதலிய விலங்கு, பேய் பூதம், சிறு தெய்வம், வறுமை, நோய், தீ, கூற்றுவனின் கோபம் முதலியவற்ருல் துன்பமுருன்.

## 2. முத்து

முத்து சலசம் (நீரில் தோன்றுவது), தலசம் (நிலத்தில்தோன்றுவது) என இருவகைப்படும். அது சங்கு, முகில், மூங்கில் பாம்பின் தலை, பன்றிக்கொம்பு, வெண்சாலி (வெண்ணெல்), சிப்பி, மீன்தலை, கரும்பு, யானையின்கொம்பு, சிங்கத்தின் கை, பெண்களின் கழுத்து கொக்கின் கண்டம் என்னும் [2]பதின்மூன்று இடங்களில் தோன்றும் சிங்கத்தின் கை, பெண்களின் கழுத்து, கொக்கின் கண்டம் என்னும் மூன்றிடங்களில் தோன்றும் முத்துக்கள் கிடைத்தற்கரியனவாம்

### முத்தின் நிறம்

சிப்பியினிடத்தும் சங்கினிடத்தும் மாடப்புருவின் வெள்ளிய முட்டையின் வடிவினைப்போலத் திரட்சியுடையன வாய்த் தோன்றும் முத்துக்கள், வெள்ளை நிறங்கொண்டு விளங்கும். முகிலிடைத் தோன்றும் முத்துக்கள், செந்நிறங் கொண்ட சூரியனைப் போன்ற

---

1. இங்குக் கூறிய ஐவகைக் குற்றங்கள் பொதுக்குற்றங்களாகும். இன்னும் சரைமலம், சம்படி, பிளத்தல், துளை, கரி, மிருத்து, கோடியில்லன, கோடிமுரிந்தன, கருகல், வெள்ளை, கல், மணல், பரிவு, தார், சாயையிறுகுதல், கருப்பத் துளை, கல்லிடை முடங்கல், திருக்கு என்ற குற்றங்கள் உள்ளதையும் நீக்குதல் வேண்டும்.

2. இப் பதின்மூன்று இடங்களே அன்றி முத்துப் பிறக்கும் இடம் இருபது என்று பிற்காலத்தவர் கூறுவர். இதனை, ''தந்தி வராகம் மருப்பிப்பி பூகம் தனிக்கதலி, நந்து சலஞ்சலம் மீன்றலை கொக்கு நளின மின்னூர், கந்தரஞ் சாலி கழைகன்னல் ஆவின் பல் கட்செவிகார், இந்துவுடும்பு கராமுத்தம் ஈனும் இருபதுமே'' என வரும் இரத்தினச் சுருக்கச் செய்யுளால் உணரலாம்.

நிறத்தினைப் பெற்று விளங்கும். மூங்கிலின் தோன்றும் முத்துக்கள், மழையோடு கலந்துவிழும் ஆலங் கட்டி (ஆலம்-நீர்; கட்டி-திரட்சி) யின் நிறத்தோடு ஒத்துவிளங்கும். பாம்பினிடம் தோன்றும் முத்துக்கள் நீலநிறத்தினையுடையவாய் விளங்கும். பன்றிக் கொம்பினில் தோன்றும் முத்துக்கள் இரத்தநிறத்தினையுடையவாய் விளங்கும். வெண்ணெலில் தோன்றும் முத்துக்கள் பாதிரி மலர்போன்ற நிறங் கொண்டு விளங்கும். யானைக்கொம்பு கரும்பு, இவ்விரண்டினும் தோன்றும் முத்துக்கள் பொன்நிறத்தினையுடையனவாய் விளங்கும்.[1]

### முத்திற்குரிய தெய்வங்கள்

பால்போன்று வெண்மையாய் விளங்கும் முத்துக்களுக்கு வருணன் தெய்வமாகும். சூரியனைப்போலச் செந்நிறவொளி பொருந்திய முத்துக்களுக்குச் சூரியன் தெய்வமாகும். நீலநிறம்வீசும் முத்துக்களுக்குத் திருமால் தெய்வமாகும். இரத்தம் போல் விளங்கும் முத்துக்களுக்கு வாயுதேவன் தெய்வமாகும். பசுமை நிறமுடைய முத்துக்களுக்கு இயமன் தெய்வமாகும். பொன்னொளி வீசும் முத்துக்களுக்கு இந்திரன் தெய்வமாகும்.

### நற்குணமுடைய முத்தினை அணிவதால் ஏற்படும் பயன்

விண்மீன் போன்ற தோற்றமும் உருட்சியும், காற்றேறு, மணலேறு, கல்லேறு, நீர் நிலை என்ற குற்றங்களில்லாமையும், கையினால் எடுத்தால் திண்மையும், பார்வைக்கு இனிமை அளித்தலும், பளிங்குபோன்று தெளித்திருத்தலும் ஆகிய ஆறு குணங்கள் பொருந்திய முத்துக்களை அணிந்தால் வறுமைநீங்கும்; செல்வம் பெருகும்; வாழ்நாள் ஓங்கும்.

### 3. வயிரம்

சிறந்த தவத்தினையுடைய ததீசி முனிவர் முதுகந் தண்டெலும்பும் வலாசுரனுடைய எலும்பும் வீழ்ந்த [2]கோசலம் முதலிய நாட்டினில் தோன்றியதும், குணங்களால் மாட்சிமைப் பட்ட விளக்கமுடையதும், கையால் எடுப்பின் இலேசாய்த் திகழ்வதும், சருக்கரை இன்றித்

---

1. சிங்கத்தின்கை, பெண்களின் கழுத்து, கொக்கின் கண்டம் என்னும் மூன்றிடத்திலும் தோன்றும் முத்துக்கள் கிடைத்தல் அரியன; ஆதலால், இங்கு அவற்றின் நிறங்கள் கூறப்படவில்லை.

2. கோசலம் முதலியன என்றதனால் இன்னும் மேருமலை, கயிலைமலை, ஏமகூடம், அவந்தி, மதங்கம் அருணம் முதலிய இடங்களும் கொள்க.

தெளிவாய் ஒளி வீசுவதும், விலையினை வரையறுத்துக் கூற இயலாத அளவுகடந்த மதிப்பினையுடையதும் ஆகியது மேலான [1]வயிரம் ஆகும். இதனைக் குறுநிலமன்னன் அணியினும் குறைவற்ற செல்வம் பெற்று மிக்க பகைவரை வென்று தனது செங்கோல் உலகமுழுவதும் செல்ல ஆட்சிபுரிவான். வறுமையும், நோயும், விலங்குகளும் அவனைச் சார்ந்து வருத்தாவாம்; குறித்த நாளன்றி இயமனும், பேய்களும் பூதங்களும் துன்புறுத்தாவாம்.

வயிரத்தின் உயர்வு

இரத்தினங்களில் [2]வயிரமே மேலான முதற் சாதியாம் என்று மணிநூல் ஆராய்ச்சி வல்லுநர் கூறுவர். ஏனெனில் அவ்வயிர மணியே மற்றைய மணிகளனைத்திற்கும் துளையிடும் கருவியாகும்; தனக்கும் தானே துளைசெய்யும் கருவியாக விளங்குவதும் ஆகும் [3].

4. மரகதம்

[4] வலாசுரனின் பித்தத்தைத் தமக்கு உணவாகக் கௌவிப்பறந்த கருடன் மிக்க தண்ணிய டில்லி நாட்டினில் சிதறியதால் விழ்ந்து

---

1. பிறவாசிரியர், வயிரத்தின் குற்றம் பன்னிரண்டு எனவும் குணம் ஐந்து எனவும் கூறுவர். இதனை, ''சரைமலங் கீற்றுச் சம்படி பிளத்தல்', துளைகரி விந்து காக பாதம், இருத்துக் கோடிகள் இலாதன முரிதல், தாரை மழுங்கல் தன்னோ(டு), ஈராறும் வயிரத் திழிபென மொழிப,'' ''பலகையெட்டும் கோணம் ஆறும், இலகிய தாரையும் சுத்தியும் தராசமும், ஐந்துங் குணமென்(று) அறைந்தனர் புலவர், இந்திர சாபத் திகலொளி பெறினே'' (சிலப்பதிகாரம்-ஊர் காண் கதை (180-183) விசேடவுரை) எனவரும் மேற்கோள் நூற் பாக்களினால் அறியலாம்.

2. வயிரமே மேலான முதற்சாதி என்றதனால் மரகதம், மாணிக்கப், முத்து ஆகிய இம்மூன்றும் தலையாய மணிகள் என்றும், நீலம், புட்பராகம், வயிடூரியம் ஆகிய இம்மூன்றும் இடையாய மணிகள் என்றும், கோமேதகம், பவளம் ஆகிய இவ்விரண்டும் கடையாய மணிகள் என்றும் சுக்கிர நீதி கூறுகின்றது.

3. இங்கு, ''வயிர வூசியு மயன்வினை இரும்பும், செயிரறு பொன்னைச் செம்மைசெய் ஆணியும், தமக்கமை கருவியுந் தாமாம் அவைபோல், உரைத்திறம் உணர்தலும் உரையது தொழிலே'' என வரும் சூத்திரம் நோக்கற்பாலது.

4. வளாசுரனுடைய வயிற்றின் புறத்தைக் கொத்தி விழுங்கிய கருடன் நகைத்ததால் உமிழ, அஃது இமயம் முதலிய பல மலைகளிலும் ஊறிப் பிறந்த மணி, மரகதம் ஆயிற்று என்று அடியார்க்கு நல்லார் கூறுவர். மரகதம், 'கருடோற்காரம்' எனவும் பெயர் பெறும்.

தங்கிய இடங்களில் தோன்றிய மணி மரகதம் எனவும், தக்கன் மகளும் காசிப முனிவரின் மனைவியுமாகிய வினதை என்பவள் அருணன் உதித்த முட்டையின் ஓட்டினைக் கருடனது அரையில் கட்ட, அம் முட்டையின் ஓடு அதன் அரையினின்று தவறிக் கடல்சூழ்ந்த ஒரு தீவில் விழ, அங்குத்தோன்றிய மணி மரகதம் எனவும் ''திருமால் மோகினிப் பெண் வடிவங்கொண்டு ஓடச் சிவபெருமான் ஒரு திரு விளையாட்டாகப் பின் தொடர்ந்து மந்தர மலையின் எல்லைவரையும் சென்று செந்தியாகிய இந்திரியத்தைச் சிந்தினர்; அப்போது அவ் விந்திரியத்தில் ஐயனர் (அரிகரபுத்திரர்) கானகத்தில் உறையும் பரிவார தெய்வங்களோடு தோன்றினர்; அந்த விந்தினைக் கருடன் கௌவிச் சென்று கடலிலும் துருக்க நாட்டிலும் சிந்தியது''. அங்குத் தோன்றிய மணி மரகதம் எனவும் கூறுவர். இவ்வாறு தோன்றிய மரகதம் கருடப் பச்சை என வழங்கப்பெறும்.

மரகதத்தின் வகைகளும் நிறங்களும்

கருடப் பச்சை காடம், சுப்பிரம், காளம் என்ற மூன்று குணங்களில் ஒன்றையுடையது. அவற்றுள், அறுகம்புல்லின் இதழ்போலும் நிறங் கொண்ட காடம் சகுணம், சதோடம் என இருவகைப்படும். (சகுணம் - குணசம்பந்தமுள்ளது; சதோடம் - தோஷ சம்பந்தமுள்ளது.)

சகுணம், காடம், உல்லசிதம், பேசலம், பித்தம், முத்தம், பிதுகம் என ஆறு வகைப்படும். அவற்றுள், காடகம் புல்லின் பசிய நிறமுடையது. உல்லசிதம் மென்மைத் தன்மையினைக்கொண்டது. பேசலம் குள நீரால் விளையும் செந்நெற்பயிரில் தோன்றிய பசிய முத்துப்போன்ற நிறத்தினைக்கொண்டது பித்தகம் பசுங்கிளியினது சிறகின் நிறத்தினைப் போன்றது. முத்தம் துளசியின் நிறத்தினைக் கொண்டது. பிதுகம் தாமரை இலையின் நிறத்தினை யுடையது.

சதோடம் தோடலேசாஞ்சிதம், துட்டம், தோட மூர்ச்சிதம், தோட லேசம், மந்ததோடம் என ஐந்து வகைப்படும். தோடலே சாஞ்சிதம், எலுமிச்சை யிலையின் நிறத்தினையுடையது. துட்டம் அலரி இலையின் நிறத்தினையும் கருங்குவளை இதழின் நிறத்தினையும் உடையது. தோட மூர்ச்சிதம் புல்லின் நிறத்தினையுடையது. தோடலேசம், தாமரையிலையின் நிறத்தினையுடையது. மந்த தோடம் மயிலிறகின் நிறத்தினையுடையது.

சிவ சிவ

# ' ஸ்ரீ குமர குருபரர் '

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர்

## ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்

அவர்களின் அருளாணையின் வண்ணம் வெளிவரும்

## சமய இலக்கியத் திங்கள் இதழ்

### சந்தா விபரம்

| | | | |
|---|---|---|---|
| ஆயுட் சந்தா | ( உள்நாடு ) | ரூ. | 100—00 |
| ,, | (வெளிநாடு) | ரூ. | 125—00 |
| ஆண்டுச் சந்தா | ( உள்நாடு ) | ரூ. | 7—50 |
| ,, | (ஸ்ரீலங்கா ) | ரூ. | 10—00 |
| ,, | (வெளிநாடு) | ரூ. | 12—00 |

### விளம்பரக் கட்டண விகிதங்கள்

| | | |
|---|---|---|
| அட்டை பின்பக்கம் 2 வண்ணங்கள் | ரூ. | 150—00 |
| முன் அட்டை உள்பக்கம் | ரூ. | 125—00 |
| பின் அட்டை உள்பக்கம் | ரூ. | 100—00 |
| உள் முழுப்பக்கம் | ரூ. | 60—00 |
| உள் அரைப்பக்கம் | ரூ. | 30—00 |

முகவரி :- நிர்வாக ஆசிரியர் :- ' ஸ்ரீ குமரகுருபரர் '
ஸ்ரீகாசிமடம், திருப்பனந்தாள் அ. கு. எ. 612 504
(தஞ்சை மாவட்டம்)

| | | | |
|---|---|---|---|
| திருவருட்பயன் | (விளக்க உரையுடன்) | விலை ரூ. | 1—50 |
| நீதிநெறி விளக்கம் | ,, | விலை ரூ. | 1—50 |
| உண்மைநெறி விளக்கம் | ,, | விலை ரூ. | 0—75 |
| கந்தர்கலி வெண்பா | ,, | விலை ரூ. | 1—50 |
| உண்மை விளக்கம் | ,, | விலை ரூ. | 1—00 |
| திருவுந்தியார் | ,, | விலை ரூ. | 1—25 |
| கொடிக்கவியும் வினாவெண்பாவும் | ,, | விலை ரூ. | 0—75 |
| திருக்களிற்றுப்படியார் | ,, | விலை ரூ. | 1—25 |
| திருக்குறள் ஒரு பொதுமறை | | விலை ரூ. | 3—00 |
| மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் – கருத்தரங்கக் கட்டுரைகள் | | விலை ரூ. | 3—00 |
| திருவாசகம்-ஆங்கில மொழிபெயர்ப்பு, ( கோ. வன்மீகநாதன் ) | | விலை ரூ. | 15—00 |
| தொல்காப்பியம் – நன்னூல் – எழுத்ததிகாரம் (வித்துவான் க. வெள்ளைவாரணனார்,) | | விலை ரூ. | 10—00 |
| திருவருட்பயன் – நிரம்ப அழகிய தேசிகர் உரையும் திரு. க. வெள்ளைவாரணனார் எழுதிய உரை விளக்கமும் | | விலை ரூ. | 5—00 |

---

ஒவ்வொன்றிலும் 20 பிரதிகளுக்குக் குறையாமல்
வாங்குவோருக்கு 20% கழிவு உண்டு.

தபாற்கட்டணம் தனி. 1000 ரூபாய்க்கு மேற்பட்ட ஆர்டர்களுக்கு அனுப்புகைச் செலவு இலவசம்.

நூல்கள் கிடைக்குமிடம்:–

நிர்வாக ஆசிரியர் : ' ஸ்ரீ குமரகுருபரர் '
ஸ்ரீகாசிமடம், திருப்பனந்தாள் அ. கு. எ. 612 504
( தஞ்சை மாவட்டம் )

தருமையாதீனம் பத்தாவது குரு மகாசந்நிதானம்

**ஸ்ரீலஸ்ரீ சிவஞான தேசிக பரமாசாரிய சுவாமிகள்**

அருளிய

# ஸ்ரீ காசி விசுவநாதர் திருவருட்பா

( புவியில் அன்னை - கங்கை )

அங்கண்வா னத்தமரர் பிறவிப் பெரும்பிணிக்(கு)
அருமருந்(து) தெனவும் அயன்மால்
ஆதியோர் அரகரா இந்தநதி அற்புதம்
அகிலத்துள் இல்லை எனவும்

எங்கள்மல திமிரபட லம்கிழித்(து) ஓட்டுதற்(கு)
இரவிசத கோடி எனவும்
இந்த்ரசா லப்பகட்(டு) ஆகும்ப்ர பஞ்சமோ(டு)
இரண்டுவித மாயை என்னும்

பங்கமுற் றும்கழுவ வருஞான ஆனந்த
பரிசுத்த சலதி எனவும்
பரமகல் யாணகுண பரமசிவ சத்தியொடு
பாகீர திப்பெயர் புனை

கங்கைநதி யைப்புவியில் **அன்னை**யென வைத்தநின்
கருணைதனை என்சொல்லு வேன்
காசிவிசு வேசனும் தோஜோ சொரூபமே
கருணை நிதித்தெய்வ மே. (8)

ஸ்ரீகாசிமடத்திற்காக வெளியிட்டவரும் ஆசிரியரும் ம. வே. பசுபதி,
திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம் ஸ்ரீ குமரகுருபரர் அச்சகத்தில்
அச்சிட்டவர் முத்து. மெய்கண்டதேவன்
முகவரி :- ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள் – Pin 612 504